# நோட்டீஸ்

## வியாபாரிகளுக்கு ஓர் அரிய சந்தர்ப்பம்



தற்காலத்திய சாமான்கள் போக்கு வரத்தின் கஷ்டங்களை நிவர்த்தி செய்வதின் பொருட்டு, நாங்கள் ஏராளமான சாமான்களை

**“மதராஸிலிருந்து பெங்களூருக்கும்**
**திருச்சியிலிருந்து பெங்களூருக்கும்”**

ஸரஸமான வாடகைக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடு செய்துள்ளோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். ::



சாமான்களை ஜாக்கிரதையாயும் கூடுமானவரையில் சீக்கிரமாயும் எடுத்துச்செல்ல நாங்கள் ஜவாப்தாரி.

மற்ற விபரங்களுக்கு தயவு செய்து எழுதவும்.

## ஸ்ரீ ராம விலாஸ் ஸர்வீஸ் லிமிடெட்,

203, மவுண்ட் ரோடு, மதராஸ்.

டெலிபோன் நெ 8536. தந்தி :- ‘ரோட்ஹால்’

# இண்டோ - கமர்ஷியல் பாங்க் லிமிடெட்.,

## 1942-ஆம் டிசம்பர்-மீ 31உடைய கணக்கு விவரம்

### பொறுப்புகள்

| | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |
|---|---|---|
| மூலதனம்: | | |
| அதிகாரம் பெற்றது | ...25,00,000 0 0 | |
| ரொக்கத்திற்குக் கோரப் பட்ட மூலதனம் | ...21,25,000 0 0 | |
| கோரப்பட்டு செலுத்தப் பட்டது | ...18,75,000 0 0 | |
| இதில் வசூல் பாக்கி .... | 1,124 4 11 | 18,73,875 11 1 |
| ரிஸர்வ் நிதி ... | | 85,000 0 0 |
| அவசர நிதி ... | | 15,000 0 0 |
| பொறுப்புகள்: | | |
| பிக்ஸட், கரண்டு, சேவிங்ஸ் பாங்க், மாதவாரி டிபாஸிட், இயாஷ் ஸர்டிபிகேட், சிப்பந்திகள் ஜாமீன், பிராவிடெண்ட் கிராட்டியூட்டி நிதி மற்றும் இதர பொறுப்புகள் ... | ...1,29,39,740 5 2 | |

### ஆஸ்திகள்

| | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |
|---|---|---|
| கடன்கள், காஷ் கிரெடிட் பில்கள், டிராப்டுகள், புரோகோட்டுகள், பில்கள் முதலியன ... | | 53,98,635 9 9 |
| 1913ஆம் வருஷத்திய இந்திய கம்பெனிகளின் சட்டம் VII-ன் படி தேவையான விவரங்கள்: | | |
| 1. பாங்கிக்குப் பூர்ணமான செக்யூரடியுள்ள கடன்கள்: | ...29,61,456 8 6 | |
| 2. நல்ல கடன்களென்று மதிக்கப்பட்டு ஆதரவுள்ள கடன்கள்: | | |
| (a) ஜாயிண்டு & தனி புரோ கோட்டுகள் .... | 7,69,535 8 0 | |
| (b) பலர் தனித் தனியாக எழுதிக் கொடுத்த புரோ கோட்டுகள் | 3,54,156 9 1 | |
| (c) பில்கள், டிராப்டுகள் ... | 12,48,170 3 8 | |
| (d) தற்காலிக ஓவர் டிராப்டுகள் | 43,809 9 8 | |
| 3. சந்தேகப்படத்தக்க கடன்கள் | 21,507 7 10 | |
| தற்சமயமாவது எப்பொழுதாவது டைரக்டர்களுக்கு கொடுக்கப் பட்ட கடன்கள், அட்வான்சுகள் | Nil | |
| பாங்கி கட்டிடம்: | | |
| வாங்கின விலை ... | 24,379 3 5 | |
| 31-12-42 வரை தள்ளுபடி செய்யப்பட்டது ... | 3,600 0 0 | 20,779 3 5 |
| ஸேப்கள், மரதளவாடங்கள்: | | |
| வாங்கின விலை ... | 1,04,622 7 1 | |
| இவ்வருஷத்தில் வாங்கினது | 782 15 10 | |
| | 1,05,405 6 11 | |

| | | |
|---|---|---|
| [illegible]க்குக் கொடுக்க வேண்டியவை | Nil | 1,29,39,740 5 2 |
| பெற்றுக் கொள்ளாத டிவிடெண்டுகள் ... | | 2,588 6 4 |
| வசூல் பில்கள் ... | | 10,59,097 9 3 |
| சில்லரை இனங்கள் ... | | 38,600 9 7 |
| வழங்கப்பட்ட டிராப்ட்கள் தந்திகள் ... | | 1,13,371 6 5 |
| பிராஞ்சு அட்ஜெஸ்ட்மெண்டுகள் ... | | 4,29,719 1 4 |
| லாப நஷ்டக் கணக்கு : | | |
| முன்கணக்குப்படி பாக்கி... | 88,806 11 6 | |
| இதில் டிவிடெண்டு, அவசரநிதி, வருமான வரி, மானேஜிங் டைரக்டர் சன்மானம் இவைகளுக்கு ஒதுக்கிவைக்கப்பட்டது. .... | 87,566 3 2 | |
| | 1,240 8 4 | |
| இவ் வருஷத்திய நிகர லாபம் | 1,00,480 5 5 | 1,01,720 13 9 |
| ஆக மொத்தம் ... | | 1,66,58,713 14 11 |

| | | |
|---|---|---|
| [illegible] | 1,03,160 10 5 | |
| 31-12-42 வரை தள்ளுபடி செய்யப்பட்டது ... | 28,122 1 0 | 75,038 9 5 |
| கைவசமுள்ள புஸ்தகம் ஸ்டேஷனரி | | 44,556 15 4 |
| வசூல் பில்கள் ... | | 10,59,097 9 3 |
| சில்லறை இனங்கள் ... | | 1,03,965 11 11 |
| முதலீடுகள் : | | |
| * கவர்ன்மெண்ட் புரோநோட்டு, எழுதப்பட்ட மதிப்பு ரூ. 39,19,000 (மார்க்கெட் மதிப்பு ரூ. 39,08,515 5 0) வாங்கின விலை | ...39,40,996 1 8 | |
| ரிஸர்வ் பாங்க் ஆப் இந்தியா பங்குகள் விலை | 500 0 0 | |
| ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகளது டிபெஞ்சர்களின் மதிப்பு ரூ. 27,200 வாங்கின விலைப்படி ... | 27,200 0 0 | |
| ஷெட்யூல்ட் பாங்கிகளிலுள்ள டிப்பாஸிட்கள் செக்யூரடி... | 15,725, 0 0 | |
| ஸ்தாவர சொத்துக்கள் வாங்கின விலைப்படி ... | 22,563 15 2 | 40,15,985 0 5 |
| முதலீடுகளின் பேரில் சேர்ந்துள்ள வட்டி ... | | 17,957 5 0 |
| கைவசமுள்ள ரொக்கம்... | 25,55,045 7 6 | |
| கரண்டு கணக்கில் பாங்கர்களிடம் | ...33,67,652 6 11 | 59,22,697 14 5 |
| ஆக மொத்தம் ... | | 1,66,58,713 14 11 |

* ரூ. 55,500 மதிப்புள்ள கவர்ன்மெண்ட் பிராமிசரி நோட்டுகள் டிப்பாஸிட்கள் பிராவிடெண்ட் நிதிக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

டைரக்டர்கள்

P.S. சுப்பிரமணிய அய்யர் B.A., G.D.A., R.A. ரிஜிஸ்டர்டு அக்கௌண்டெண்ட் & ஆடிட்டர்
R.S.A. சங்கா அய்யர்
K. சிவசாமி
T.R. வெங்கட்ராம சாஸ்திரி சேர்மன்
R. விஸ்வநாதன்
V. வெங்கட்ராமன்
S.N.N. சங்கரலிங்க அய்யர் மானேஜிங் டைரக்டர்

## ரஸிகர்களால் சிறந்ததென விரும்பப்படுவது!

# "ராஸ்கோ"வின்

பரிமள

# காஸ்டர் ஆயில்

ப்ராங்க் ராஸ்
&
கோ., லிட்.,
கல்கத்தா.




தென் இந்தியாவிற்கு பூர்ண விற்பனையாளர்:-
ஓரியண்டல்
மர்கண்டைல்
ஏஜென்ஸி,
பாலக்காடு.



— ஜில்லா ஏஜெண்டுகள் —

திருச்சி : கரூர் கமர்ஷியல் ஸிண்டிகேட், லிட்., - கரூர்.
சேலம் & வட-தென்னாற்காடு : டிரேட் சர்வீஸ்-சேலம்
கொச்சின் & திருவனந்தபுரம் : அப்துல்லா ஹாஜி முகம்மது, கொச்சின்.
கி. & மே. கோதாவரி : கடிமிண்டி பிரதர்ஸ், எல்லூர்

குண்டூர் & நெல்லூர் : ஸ்ரீனிவாஸ் மெடிகல் & பேன்ஸி மார்ட்-ராப்பள்ளி.
மதுரை & ராமநாதபுரம் : சாரதா ஸ்டோர்ஸ், -காரைக்குடி.
கோவை & நீலகிரி : யுனைடெட் ஏஜென்ஸிஸ், கோவை
மதராஸ் ஸிடி : R. N. ராஜன், 49, பந்தர் தெரு.

**பிரதிநிதிகள் இல்லாத இடத்தில் ஏஜெண்டுகள் தேவை.**
**தென் இந்தியாவின் பூரண விற்பனையாளருக்கு எழுதவும்.**

---

நாடெங்கும்
அழகிற் சிறந்த மாதர்கள்
உவந்து உபயோகிப்பது





## மைசூர் சந்தன சோப்

அது அவர்களது அழகை நன்கு பாதுகாக்கிறது. இந்த சோப் ஒன்றுதான் தங்களது அழகை பாதுகாக்கவல்லது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள்

# மைசூர் சந்தன சோப்



கே. எல். வி. வஸந்தா



என். எஸ். கிருஷ்ணன்



டி. ஏ. மதுரம்

நடிக்கும்

முருகன் டாக்கீஸாரின்

# மஞ்சு கோஷா

டைரக்ஷன் : பி. என். ராவ்




## முருகன் டாக்கி பிலிம் கம்பெனி

மதுரை

# உமது குழந்தை ஈரல் குலைகட்டி பெருத்திருந்தால்



எவ்வித வைத்திய முறையினாலும் குணப்படுத்த முடியாதிருந்த இக்குலைநோய். ஓர் அற்புத ஆராய்ச்சி முறையினால் வைத்தியத்திற்கு கட்டுப்பட்டு, சென்ற 36 வருஷங்களாக பல்லாயிரக்கணக்கான குழந்தைகளை காப்பாற்றியுள்ளது. இந்தியா பூராவிலுமுள்ள வைத்திய நிபுணர்களால் போற்றப்பட்டது.

## ஜம்பியின் லிவர் க்யூர்

## உபயோகியுங்கள்.

ஈரல் குலைகட்டி முதலியவைகளுக்கு இது ஒரு அற்புத நிவாரணி.

எல்லா மருந்துஷாப்பிலும் கிடைக்கும்.

ஜம்பி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்,
மைலாப்பூர் — மதறாஸ்.
சப் ஆபீஸ்: கும்பகோணம். பிராஞ்சுகள்: கல்கத்தா, லக்னோ, பம்பாய், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, விஜயநகரம்.

## பழைய பிளேடுகளை எறியவேண்டாம்




சோல் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்

## மெர்கன்டைல் ஏஜன்ஸீஸ்.

கோயமுத்தூர்

## ஸ்டெட்



கிராமபோன்
ஊசிகள்




கடையில்
கிடைக்கும்
ஊசிகளில்
சிறந்தது.

*Made in England*
*by*
**J. STEAD & CO., LTD.**
**SHEFFIELD**

ஜே. ஸ்டெட் & கம்பெனியாரால் இங்கிலாந்தில் செய்யப்பட்டது.

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 2, இதழ் 21 — 1943 பிப்ரவரி 20 — சித்திரபானு ௵ மாசி மீ 8உ.



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனைச் சம்பவங்கள்.

★

அறுபது வயதுக்குப் பிறகு சாதாரணமாய் எல்லாரும் ஓய்வு எடுத்துக் கொள்வது வழக்கம். மகாத்மாவுக்கு வயது எழுபத்து நாலு ஆகிறது. இந்த வயதில் தேச விடுதலையைக் கருதி மகாத்மா இருபத்தொரு நாள் உண்ணா விரதம் ஆரம்பித்திருக்கிறார். இது மகாத்மா தமது வாழ்நாளில் தேசத்துக்காக மேற்கொள்ளும் ஐந்தாவது உபவாசமாகும். "நேற்றையவிட இன்று காந்திஜியின் நிலைமை மோசமாகி யிருக்கிறது" என்று படிக்கும்போது நமக்குக் கதி கலங்குகிறது. "நிலைமை விபரீதமாவதற்கு முன் அதிகார வர்க்கத்தின் கல் மனது கரையுமா? மகாத்மா விடுதலை யடைவாரா?" என்னும் கூக்குரல் தேசத்தின் நாலா பக்கமும் எழுகின்றது. கடவுளின் சித்தம் எப்படி யிருக்கிறதோ?

★



# WE KEEP GOOD TIME

## AND SO DO WE





**செகண்டஸ் மைனியேசர் ரெக்டாங்குலர்**

| | | |
|---|---|---|
| ரோல்டு கோல்டு | ... | ரு. 60 |
| 18 காரட் சாலிட் கோல்டு | ... | ரு. 107 |



**செகண்டஸ் நியூ காலிபர் ரெக்டாங்குலர்**

| | | |
|---|---|---|
| நிக்கல் சில்வர் | ... | ரு. 51 |
| ரோல்டு கோல்டு | ... | ரு. 68 |
| 9 காரட் சாலிட் கோல்டு | ... | ரு. 107 |
| 18 காரட் சாலிட் கோல்டு | ... | ரு. 155 |

**முற்றிலும் நம்பத்தகுந்த கடிகாரங்கள்!**

மற்றவைகளைக் காட்டிலும் 'வெஸ்ட் எண்டு' கடிகாரங்களே மிகவும் சிறந்தவை என்பது அனுபவத்தின் மூலம் ஒப்புக் கொள்ளப்பட்டதே. உண்மையாகவே எவ்விதத்தில் மதிப்பிட்டாலும் அவைகள் முதன்மை ஸ்தானம் வகிக்கின்றன. ஏனெனில் உலகில் சிறந்த கடிகாரம் உற்பத்தி செய்பவர்களிடமிருந்து மேன்மையான மூலப்பொருள்களால் 'வெஸ்ட் எண்டு' கடிகாரங்கள் செய்யப்படுவதே அதன் காரணம்.

உங்களது விருப்பத்திற்கும் சௌகரியத்திற்கும் தகுந்த வெஸ்ட் எண்டு கடிகாரம் கிடைக்கும். கண்ணைக் கவரும் இலவச கேட்லாகிற்கு இன்றே எழுதவும்

**வெஸ்ட் எண்டு வாட்ச் கோ.**

பம்பாய் — கல்கத்தா.

# WEST END WATCH Co.

BOMBAY 11 CALCUTTA



கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

# என்ன சேதி?

## அதுவும் ஒரு காரணம்

எந்த விபரீதம் நேரக்கூடாதென்பதற்காகக் காங்கிரஸ் — சர்க்கார் சமரசம் ஏற்பட வேண்டுமென்று நாம் வற்புறுத்தி வந்தோமோ, அந்த விபரீதம் கடைசியில் நேர்ந்தே விட்டது. மகாத்மா தள்ளாத வயதில் இருபத்தோரு நாள் உண்ணு விரதத்தை மேற்கொண்டிருக்கிறார். வைஸராய்க்கு மகாத்மா எழுதிய கடிதத்தில் உண்ணு விரதத்தின் காரணங்களைக் குறிப்பிடும் போது, ராஜாஜி தம்மைப் பார்க்க அநுமதி கேட்டதை மறுத்ததையும் ஒரு காரணமாகச் சொல்லியிருக்கிறார். "இந்த ஸி. ஆர். எதற்காக வேலையற்றுப் போய் வைஸராயை அநுமதி கேட்டார்!" என்று அப்போது சில தேசபக்த சிங்கங்கள் கர்ஜித்தன; சுதந்திரப் புலிகள் உறுமின. மகாத்மா அதை ஒரு பிசகாகக் கருதவில்லையென்றும், ராஜாஜி தம்மை வந்து பார்ப்பதை அவர் விரும்பினார் என்றும் இப்போது தெரிய வருகிறது. அதே ராஜாஜிதான் இப்போதும் காந்திஜியின் உயிரைக் காப்பாற்றுவதற்காகப் பெரு முயற்சி செய்து வருகிறார். அவருடைய முயற்சி வெற்றி பெற வேண்டுமென்று தேசம் முழுவதும் இன்று பிரார்த்திக்கிறது.

## 450 கோடிக்கு ஆபத்து!

"நம்முடைய பணம் 450 கோடி ரூபாய்க்கு ஆபத்து வந்துவிடலாம்! ஜாக்கிரதை!" என்று ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் எச்சரிக்கை செய்கிறார். "நம்முடைய பணம்" என்றால், இந்திய மக்களின் பணந்தான். இந்த யுத்தம் ஆரம்பமானது முதல் இந்தியாவிலிருந்து சீமைக்கு ஏராளமான சாமான்கள் ஏற்றுமதியாகி வருவதில் இந்தியாவுக்கு இங்கிலாந்து 750 கோடி ரூபாய் கொடுக்கவேண்டியதாயிற்று. இதில் ஏற்கெனவே, இங்கிலாந்துக்கு இந்தியா பட்டிருந்த கடன்களைக் கழித்தால், 450 கோடி ரூபாய் பாக்கி நிற்கிறது. இவ்வளவு ரூபாயும் இங்கிலாந்தின் காகித நோட்டுப் பணமாக (ஸ்டர்லிங்) இப்போது இருந்து வருகிறது. "இதை இப்படியே விட்டிருந்தால் ஆபத்து! யுத்தம் முடிந்தவுடன் திடீரென்று ஒரு நாள் இந்தப் பணம் மாயமாய் மறைந்து போகும். இதில் ஒரு பகுதியையாவது அமெரிக்க டாலராக மாற்றி வைத்திருந்தால் நல்லது" என்று ஸர் ஆர். கே. ஷண்முகம் கூறுகிறார். சென்ற யுத்த முடிவில் இம்மாதிரி இந்தியாவுக்கு வரவேண்டியிருந்த பணம் நாணயமாற்று இந்திர ஜாலத்தினால் மாயமாய் மறைந்ததையும் எடுத்துக் காட்டுகிறார். ஆனால், 450 கோடி ரூபாய்தானா? யுத்தம் முடிவதற்குள் இது இன்னும் எவ்வளவோ பெருகிவிடத்தான் போகிறது. அவ்வளவு பணத்தையும் நாம் பத்திரமாய்த் திரும்பிப் பெறுவதற்கு வழி என்ன? ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அதாவது, யுத்தம் முடிவதற்குள்ளே இந்தியா சுயாட்சியை அடைய வேண்டும். இல்லாவிட்டால், ஸர் ஷண்முகம் முதலியவர்கள் எத்தனை எச்சரிக்கை செய்த போதிலும், எவ்வளவுதான் நாம் விழித்த விழிப்பாயிருந்த போதிலும், அபக்காய ஸ்வாஹாதான்!

## சட்ட சபை எதற்கு?

புது டில்லியில் 'இந்திய சட்ட சபை' என்பதாக ஒன்று நடந்து வருவது நேயர்களுக்குத் தெரியும். நாட்டில் நிர்வாகம் நடக்கும் அழகைக் கவனிக்கும்போது சட்ட சபை என்று ஒன்று அவசியமில்லை யென்றே தோன்றுகிறது. ஏனென்றால் வைஸராய் இது வரை எழுபதுக்கு மேற்பட்ட அவசரச் சட்டங்கள் பிறப்பித்து அவற்றின் மூலம் தேசத்தை ஆண்டு வருகிறார். அதன் பயனாகப் பழைய சட்டங்களுக்கெல்லாம் அநேகமாகப் பென்ஷன் கொடுத்தாகி விட்டதென்றே சொல்லலாம்.

அது மட்டுமல்ல. சர்க்காரே தங்கள் சட்டங்களுக்கு மதிப்பு வைப்பதாய்த் தெரியவில்லை. உதாரணமாகப் போலீஸார் ஒரு நபரைக் கைது செய்கிறார்கள். அவருக்குக் கீழ்க் கோர்ட்டில சிறைவாசத் தண்டனை கிடைக்கிறது. அவர் அப்பீல் செய்து கொள்கிறார். அப்பீல் கோர்ட்டுகளில் எல்லாம் அவருக்கு விடு


வைஸ்ராய்க்குத் தந்திமேல் தந்தி வந்து குவிகிறது.


பொது ஜனங்கள் யாரை யார் பார்த்தாலும் ஒரே கேள்வியைத்தான் கேட்கிறார்கள்.


ராஜாஜி முதலிய தலைவர்கள் டில்லியை நோக்கி ஓடுகிறார்கள்.
டில்லி


டில்லியில் கூடிய தலைவர்கள் கவலையுடன் ஆலோசிக்கிறார்கள்.







லண்டனுக்கும் டில்லிக்கும் டெலிபோனில்
பரபரப்பான பேச்சு வார்த்தை நடக்கிறது.




லண்டன் பத்திரிகாசிரியர்களுக்கு இந்தியா
வைப் பற்றி அபத்தமாக உளறிக்
கொட்ட இன்னொரு
சந்தர்ப்பம்
கிடைக்கிறது.




இந்தியப் பத்திரிகாசிரியர்கள் 'ஸென்ஸார்' நிர்ப்பந்தங்களிலிருந்து
விடுதலையடையத் திணறிக் கொண்டிருக்கிறார்கள்.




வைஸராய் நிர்வாகசபைச் சிறை.
வைஸராய் நிர்வாகசபையின் மூன்று இந்திய
அங்கத்தினருக்கு விடுதலை கிடைத்து விட்டது.

தலை கிடைத்து விடுகிறது. ஆனாலும் அவர் தப்ப முடியாது. அப்பீல் கோர்ட் கட்டிடத்துக்கு வெளியே அவர் காலடி எடுத்து வைத்த மாத்திரத்தில் சர்க்கார் இந்தியப் பாதுகாபபுச் சட்டப்படி அவரை மறுபடியும் கைது செய்து விடுகிறார்கள். கடைசியில், வக்கீலகள் கரடியாகக் கத்தியதும் நீதிபதிகளின் காலம் விரயமானதும்தான் மிச்சம். சட்டசபையும், சட்டங்களும், சட்ட மெம்பரும் இல்லாவிட்டால் மேற்படி தொல்லைகளாவது மிஞ்சு மல்லவா?

## குறைச்சல் இல்லை

நமது ரயில்வே என்ஜின்களைப் போன்ற ஸ்வாரஸ்யமான விஷயம் தற்காலத்தில் வேறு ஒன்றும் இல்லை. அவை மணிக்கு 10 மைல் வேகத்திலும் 15 மைல் வேகத்திலும் அதி துரிதமாகச் செல்லக் கூடியவை. நம்மை உத்தேசித்தே அவை ஸ்பெஷலாக பர்மிங்ஹாமில் தயாரிக்கப் பட்டு இங்கே இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்ட பிரிட்டிஷ் என்ஜின்களின் அழகான கருப்பு நிறத்தையும். 'கூ கூ!' என்று அவை சத்தம் போட்டுக் கொண்டு போகும் அழகையும் பார்த்து நாம் வியந்திருக்கிறோம். அவைகளின் வசீகரத்தைப் பார்த்துவிட்டுத் தான் குழந்தைகள் கூட அடிக்கடி ரயில்வே என்ஜினாக மாறிவிட ஆசைப் படுகிறார்கள்! எவ்வளவு சினிமாப் படங்களில் என்ஜின்கள் பேஷாக நடித்து நம்மைச் சந்தோஷத்துக்குள்ளாக்கி யிருக்கின்றன!

இவ்வளவு விசேஷம் வாய்ந்த நமது என்ஜின்களைப் பற்றிச் சமீபத்தில் டெல்லி சட்ட சபையில் பிரஸ்தாபிக்கப் பட்டது. ரயில்வே பட்ஜட்டைச் சமர்ப்பித்த போக்கு வரத்து மெம்பர் ஸர் எட்வர்ட் பென்தால் என்ஜின்களைப் பற்றி ஒரு திடுக்கிட வைக்கும் விஷயத்தைச் சொன்னார். அதாவது என்ஜின் நிர்மாணம் செய்யும் தொழிற்சாலை ஒன்றை இந்தியாவிலேயே கட்டி முடிக்க துரிதமான ஏற்பாடுகள் ஆகிவருகின்றன என்றார். "நம்ம தேசத்திலேயா? இனிமேல் இங்கேயா என்ஜின் செய்யப் போகிறார்கள்?" என்று நமக்குத் தூக்கி வாரிப் போட்டது. "ஐயோ! இங்கேயே என்ஜின் செய்ய ஆரம்பித்து விட்டால் அப்புறம் பிரிட்டனில் செய்த என்ஜின்களை வாங்க முடியாதே! அமெரிக்காவில் செய்த என்ஜின்கள் என்ன கதி ஆகிறது!" என்று துக்கப் பட ஆரம்பித்தோம்.

அப்படியெல்லாம் நாம் துயரப் படக் கூடாதென்பதற்காக, அடுத்த வரியில் ஸர் பென்தால் ஆறுதல் வார்த்தைகள் சொல்லிவிட்டார். "தொழிற்சாலை ஏற்படுத்தத் திட்டம் போட்டிருக்கிறோமே தவிர, அதற்கு வேண்டிய மெஷின்களும் கருவிகளும் இப்பொழுது கிடைப்பது கஷ்டமாகத் தான் இருக்கும். இருந்தாலும், திட்டத்தைப் போட்டு வைத்தால் யுத்தம் முடிந்த பிறகாவது அது நிறைவேற சாத்தியமா யிருக்குமல்லவா?" — என்று கேட்டு நம் கவலையைப் போக்குகிறார்.

ஆகவே, தற்போதைக்கு பிரிட்டிஷ் என்ஜின்களுக்கு ஆபத்து இல்லை என்று தெரிகிறது. அவை 'பள பள'வென்று மின்னிக் கொண்டு பறந்து போவதை நாம் ஆனந்தமாகப் பார்த்துக் கொண்டிருக்கலாம்! நமக்கு என்ன குறைச்சல். போங்கள்!

## விறகுப் பஞ்சம்

பார்லிமெண்டில் அமெரி துரை ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் இந்தியாவில் இன்னும் பஞ்சமான நிலைமை ஏற்படவே இலலை என்று கூறினாராம். ஜனங்கள் ஒன்றுமே கிடைக்காமல் செத்து மடிந்தால்தான் அவர் பஞ்சம் என்று ஒப்புக்கொள்வார் போலிருக்கிறது. ஆனால் நாட்டிலோ ஒன்றில்லாவிட்டால் ஒன்றுக்குப் பஞ்சம் ஏற்பட்டுக் கொண்டே தான் வருகிறது. இந்த வாரம் சென்னையில் திடீரென்று விறகுப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது.



நாகரிக உடை தரித்த பலர் ஊரெல்லாம் சுற்றி விறகுக் கட்டைகளை விலைக்கு வாங்கிக் கொண்டோ அல்லது திருடிக் கொண்டோ சைக்கிள்களில் ஏற்றிச் செல்லும் காட்சியை இன்று சென்னையில் சர்வ சாதாரணமாய்ப் பார்க்கலாம். விறகும், அரிசியும் ஏராளமாய்க் கிடைக்கும் நாட்டிலே அவற்றிற்குப் பஞ்சம் ஏற்படும்படி செய்யும் சர்க்காரின் சாமர்த்தியத்தை நம்மால் மெச்சாதிருக்க முடியவில்லை!

# உயிர்ப் பிச்சை கொடுங்கள்!

வைஸ்ராயைக் கேட்டுக் கொள்கிறோம்.

அமெரிக்காவை வேண்டிக்கொள்கிறோம்.

சர்ச்சிலுக்கு விண்ணப்பித்துக் கொள்கிறோம்.

அதிகார வர்க்க தேவதையை ரொம்ப ரொம்பப் பிரார்த்தனை செய்கிறோம்.

இன்னும் யாரை யெல்லாம் கேட்டுக் கொள்ள வேண்டுமோ, அவர்களை யெல்லாம் கேட்டுக் கொள்கிறோம்; இறைஞ்சுகிறோம்; மன்றாடுகிறோம்.

மகாத்மா காந்திக்கு உயிர்ப் பிச்சை கொடுங்கள்.

பாரதத் தாய்க்கு உயிர்ப் பிச்சை அளியுங்கள்.

இந்தியாவின் நாற்பது கோடி ஜனங்களுக்கும் ஜீவனை அளியுங்கள்.

பிரிட்டிஷ் சிறையில் மகாத்மாவின் உயிருக்கு ஆபத்து நேர்ந்தால், அது பாரதத் தாயை ஹத்தி செய்ததே யாகும். நாற்பது கோடி பாரத மக்களின் நெஞ்சைப் பிளந்ததாகும்.

ஆகையால், மகாத்மாவை உடனே விடுதலை செய்யுங்கள்.

* * *

மகாத்மாவின் உயிருக்கு பிரிட்டிஷ் சிறையில் அபாயம் நேர்ந்தால், அதன் பிறகு பிரிட்டிஷ் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் எப்போதாவது சிநேக பாவம் ஏற்படும் என்ற நம்பிக்கையை அடியோடு விட்டு விடவேண்டியது தான்.

ஆகையால், காந்திஜியை உடனே விடுங்கள்.

இந்தியாவில் நூற்றைம்பது வருஷ பிரிட்டிஷ் ஆட்சியினால் எத்தனையோ நன்மை தீமைகள் ஏற்பட்டிருக்கின்றன. மகாத்மா பிரிட்டிஷ் சிறையில் உயிர்விட நேர்ந்தால், அப்புறம் பிரிட்டிஷ் ஆட்சியின் நன்மை எதுவுமே ஞாபகத்தில் இராது. இந்த மகத்தான துயர சம்பவம் ஒன்றுதான் நினைவில் இருக்கும். சரித்திரத்தில் என்றும் அழியாத அபகீர்த்தி பிரிட்டனுக்கு ஏற்படும்.

ஆகையால், மகாத்மாவுக்கு உடனே சுதந்திரம் அளியுங்கள்.

பிரிட்டிஷ் சிறையில் மகாத்மாவின் உயிருக்கு ஆபத்து நேர்ந்தால், அதனால் இந்திய மக்களுக்கு விளையும் மனக் கசப்பும் பிரிட்டிஷ் சர்க்கார் மேல் கோபமும் அளவில்லாம லிருக்கும். இதனால், இந்தியாவின் யுத்த முயற்சிகள் நிச்சயமாகத் தடைப்படும்.

ஆதலின், காந்திஜியை உடனே விடுதலை செய்யுங்கள்.

* * *

காந்தி மகான் சிறைவாசத்துக்குப் பயந்தவரல்ல. இதற்கு முன் எத்தனையோ தடவை தாமே சிறைவாசத்தைக் கோரித் திருப்தியுடன் அநுபவித்திருக்கிறார்.

அத்தகைய சத்தியாக்கிரஹி இந்தத் தடவை சிறையிலிருந்து விடுதலை கோரி உபவாசம் இருக்கிறார்.

ஏனெனில், தாம் சமரச முயற்சி செய்யத் தயாரா யிருக்கையில் தம்மைப் பிடித்துச் சிறைக்கு அனுப்பியது அவருக்குத் துக்கத்தை அளித்திருக்கிறது. சமரச முயற்சி செய்வதற்கு இடங் கொடாமல் தம்மைச் சிறைப் படுத்தியது அவர் மனதைப் புண்ணாக்கி யிருக்கிறது.

மகாத்மா புருஷோத்தமர்; அஹிம்சையின் வடிவம்; யாருக்கும் தீங்கு நினையாத புண்ணிய புருஷர்; அவருடைய மனதைப் புண்படுத்துவதினால் பிரிட்டனுக்கு க்ஷேமம் உண்டாகாது.

ஆகையால், அவரை உடனே விடுதலை செய்யுங்கள்.

* * *

தலைவர்களைக் கைது செய்தபிறகு தேசத்தில் நடந்த விபரீத காரியங்களை மகாத்மா ஒப்புக்கொள்ளவில்லை. அந்தக் காரியங்களை அவர் வெறுக்கிறார் என்பது ஆகஸ்டு மாதத்தில் அவர் இந்தியா மந்திரிக்கு எழுதிய கடிதத்திலிருந்தே வெளியாகிறது. அந்தக் கடிதத்தை வெளியிடாமல் வைத்திருந்தது அதிகாரவர்க்கம் செய்த பெரும் பிசகாகும்.

ஆகையால், மகாத்மாவை விடுதலை செய்து விட்டு மறுகாரியம் பாருங்கள்.

தலைவர்களைக் கைது செய்தபிறகு நடந்த பலாத்காரக் காரியங்களுக்கு அதிகார வர்க்கத்தார் காங்கிரஸ் பேரிலும் மகாத்மாவின் பேரிலும் பொறுப்புக் கட்டுகிறார்கள். காந்தி மகான் தமது கடிதங்களில் அந்தப் பொறுப்பை அடியோடு மறுக்கிறார்.

ஆனால், ''மேற்படி காரியங்களைச் செய்தவர்கள் காங்கிரஸ்வாதிகளில்லா விட்டால் வேறு யார்?'' என்று வைஸராய் கேட்டிருக்கிறார்.

வைஸராயின் அறியாமை நம்மை ஆச்சரியக் கடலில் மூழ்க அடித்திருக்கிறது.

'ஸுபாஷ் போஸ்' என்று பெர்லின் ரேடியோவில் பேசும் ஒருவரைப் பற்றி வைஸராய் கேள்விப்பட்டதில்லையா?

மகாத்மாவின் அஹிம்சைக் கொள்கை அறவே பிடிக்காத தீவிரவாதிகள் சிலர் இந்தியாவில் உண்டு என்று வைஸராய்க்குத் தெரியாதா?

இவர்கள் பிரிட்டிஷ் தோல்வியையும், அச்சு நாடுகளின் வெற்றியையும் விரும்புகிறார்கள் என்று லின்லித்கோ அறியாரா?

மகாத்மா முதலிய தலைவர்களைத் திடீரென்று சிறைப்படுத்தியதால் இந்தியப் பொதுமக்களுக்கு ஏற்பட்ட கோபத்தை மேற்படி ஐந்தாம் படைக்காரர்கள் உபயோகப் படுத்திக் கொண்டார்கள் என்று ஊகிப்பதற்கு வேண்டிய புத்தி அதிகார வர்க்கத்துக்கு இல்லையா?

அவ்வளவு புத்தி அவர்களுக்கு இல்லையென்றால், அது மகாத்மாவின் குற்றமல்ல.

ஆகையால், அவரை உடனே விடுதலை செய்யுங்கள்.

வெளியில் வந்த பிறகு அவர் என்ன சொல்கிறார், அதனால் ஐந்தாம் படைக் காரியங்கள் நிற்கின்றனவா இல்லையா என்று பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

* * *

காந்தி மகான் இந்தியா தேசத்தில் பிறந்தவர்; இந்தியா தேசத்தில் வளர்ந்தவர்; இந்தியாவுக்காக அளவில்லாத தியாகங்களைச் செய்தவர்; தம் வாழ்நாளையெல்லாம் இந்தியாவின் தொண்டுக்கே அர்ப்பணம் செய்தவர்.

அத்தகைய மகா புருஷரை இந்தியாவில் சிறைப்படுத்தி வைக்க பிரிட்டிஷ் சர்க்காருக்கு எவ்வித அதிகாரமும் கிடையாது.

ஆகையால், காந்தி மகானை உடனே விடுவியுங்கள்.

* * *

இத்தனை நாளும் காங்கிரஸ் திட்டத்துக்கு மாறாகவும் பொது ஜன அபிப்பிராயத்துக்கு விரோதமாகவும் உங்களுடன் ஒத்துழைத்த நிர்வாக சபை அங்கத்தினர்கள் — மோடியும், சர்க்காரும், ஆனேயும் — தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்திருக்கிறார்கள். இதிலிருந்து பொது ஜனங்களின் ஆத்திரம் எவ்வளவு இருக்குமென்று உணருங்கள்.

உடனே, சிறைக் கதவைத் திறவுங்கள்.

* * *

சிறையில் மகாத்மாவின் உயிருக்கு அபாயம் நேர்ந்தால், கோடிக்கணக்கான இந்திய மக்களின் சாபத்துக்கு பிரிட்டிஷார் உள்ளாக நேரும். தலைமுறை தலைமுறையாக இந்திய மக்கள் பிரிட்டனைச் சபிப்பார்கள்.

ஆகையால், காந்தி மகானை விடுதலை செய்யுங்கள்.

இப்போது மகாத்மாவை விடுதலை செய்தால், தேசத்தில் காங்கிரஸ்-லீக் சமரசமும், பிறகு பிரிட்டிஷ் சர்க்காருடன் சமரசமும ஏற்படலாமென்பதற்கு எல்லா அறிகுறிகளும் இருக்கின்றன. தேசிய சர்க்கார் ஏற்பட்டு, யுத்த முயற்சிகள் பன்மடங்கு தீவிரமாய் நடப்பது சாத்தியமாகும்.

ஆதலின், மகாத்மாவை விடுதலை செய்யுங்கள்.

* * *

மகாத்மா பிரிட்டிஷ் சிறையில் உயிர் விட நேர்ந்தால், இந்தியர்களுக்கும் இங்கிலீஷ்காரர்களுக்கு மட்டுமல்ல— கீழ் நாட்டாருக்கும் மேல்நாட்டாருக்கும் என்றென்றும் அழியாத துவேஷம் ஏற்படும். இதனால் உலகம் எல்லையற்ற தீமைக்கு உள்ளாகும்.

ஆகையால், காந்திஜியை விட்டுவிடுங்கள்.

இந்தியாவின் நன்மைக்காகவும், பிரிட்டனுடைய நலத்துக்காகவும், உலக க்ஷேமத்துக்காகவும் மகாத்மாவை விடுதலை செய்யுங்கள்.

யுத்தத்தில் ஜயிப்பதற்காக விடுதலை செய்யுங்கள்.

ரொம்பவும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறோம்.

காந்தி மகானை விடுதலை செய்யுங்கள்.



# ஜப்பானுக்கு வெடிகுண்டு

பல் வேறுவகையான ஆயுதங்கள் அடிபடும் யுத்தம் இது. பீரங்கிகள், டாங்கிகள், ஆகாய விமானங்கள், கப்பல்கள் முதலியவை தற்காப்புக்குரிய ஆயுதங்களென்பது தெரிந்தவிஷயம். ஆனால் நம்பிக்கை, மனோவுறுதி, சிக்கனவாழ்வு ஆகிய ஆயுதங்களைப்பற்றி நாம் அவ்வளவுதூரம் தெரிந்துகொள்ள வில்லையாயினும் அவைகளும் முக்கியமானவை.

டிரக்குகள், ரேடியோ, துணிமணி, சிமெண்ட் உருக்கு, சாயம், சோப்பு, பற்பசை முதலிய சகல சாமான்களும் இந்தியாவை பாதுகாப்பதற்காக படைகளுக்கு வேண்டியிருக்கிறது. ஆதலின் நாமே நமது தற்காப்புடன் போட்டி போடவேண்டாம். நமக்கு இப்பொழுது இன்றியமையாதது வெற்றிதான். அது கிட்டாமல் போய்விடக்கூடாது. அதற்காக நாம் இவை ஒன்றுமே இல்லாமல் வேண்டுமானாலும் கழித்து விடுவோம்.

அதுதான் சர்வவியாபக யுத்தம். இதை நமது சத்ருக்கள் நன்கறிந்து கொண்டிருக்கின்றனர். ஆனால் நாம் இதைக் கொஞ்சமும் தெரிந்துகொள்ளவில்லை. நாமும் சம்பூரண முயற்சியுடன் எதிர்க்கிறோமென்பதை அந்த ஜப்பானியர் உணரச்செய்யுங்கள். நமது உழைப்பையும் பணத்தையும் இம் முயற்சியில் ஒன்று சேர்த்து விடுவோமானால் ஜப்பானின் மார்பில் போய் தாக்கும்படி வெடிகுண்டு வீசியதுபோலாகும்.

## டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்

...அல்லது டிபென்ஸ் லோன்களைத்தவிர

வேறெதையும் வாங்குமுன்—சற்றே யோசியுங்கள்

ஸர்ட்டிபிகேட்டுகள் உங்கள் தபாலாபீஸில் கிடைக்கும் ரூ. 10-க்கு பத்துவருடத்தில் ரூ. 3/9 லாபம் கிடைக்கிறது.

C. P. U. 27 TM.

# திண்ணை ரஸாயனம்

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்

## ஏழாம் நாள்

சேஷா சாஸ்திரிகள் :—உட்காருங்கள். கதை வளர்த்திக் கொண்டே ஏதோ தோன்றினவாறு சொல்லிக் கொண்டே போனேன். இன்றைக்கு ஏழாவது நாள். நான் சொன்னது உங்களுக்கு ஏதாவது மனதுக்குப் பிடித்ததா?

நீலகண்டர் :—ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? எவ்வளவோ தெளிவாகச் சொல்லுகிறீர்களே. மிகக் கடினமான விஷயமெல்லாம் சுலபமாக விளக்கிக் காட்டுவதில் தங்களைப்போல் யார் இருக்கிறார்கள்?

சே :—வெங்கடராமா, நீ இவாளுக்கு ரசாயனம் சொல்லுவதாக விருந்தால் என்ன செய்வாய்? ஆக்ஸிஜன், ஹைட்ரஜன் என்று சொல்லிக் கொண்டு போனால் ஏதாவது விளங்குமா?

வெங்கடராமன் :—அது உண்மை. ஆனால், பள்ளிக்கூடத்தில் சொல்லும்போது இங்கிலீஷ் டெக்னிகல் டர்ம்ஸ் போட்டு எக்ஸ்ப்ளேன் செய்தால்தான் அண்டர்ஸ்டாண்டு ஆகும். புதுத் தமிழ் வர்ட்ஸ்கள் தேடித் தேடிக் கண்டு பிடிப்பதில் டயம் வேஸ்ட்டு, சொல்லித் தரவும் முடியாது. முதலாவது புஸ்தகங்கள் எங்கே? இங்கிலீஷ் வர்ட்ஸ்கள் வைத்தே ஸைன்ஸ் எல்லாருக்கும் சொல்லித் தந்து விடுவது தான் நல்லது. இல்லாவிட்டால் ஒன்றும் பிரயோஜனமிராது.

சே :—நீஷிதர்வாள்! இவன் சொல்வதே பல அறிஞர்களுடைய அபிப்பிராயமும்.

நீ :—என்ன அபிப்பிராயம்? அவன் சொன்னது எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

சே :—சாஸ்திரத்திற்குக் கலை மொழிகள் வேண்டும். தமிழ் மொழிகளைத் தேடிக்கொண்டு போனால் காலம் விரயம் பண்ண வேண்டியதாகும். மேல் நாட்டு நூல்களை அப்படியே எடுத்து ஆங்கில பரிபாஷையிலேயே விஷயங்களை எடுத்து விளக்கலாம் என்றும் புஸ்தகங்களும் எழுதலாம் என்றும் இவர்களுடைய கட்சி.

நீ :—தமிழ் வார்த்தைகள் இருக்க ஏன் இங்கிலீஷ் வார்த்தைகள் உபயோகிக்க வேண்டும்?

வெ :—தமிழ் வார்த்தைகள் எங்கே இருக்கிறது? இப்போது ஆக்ஸிஜன் இருக்கிறது. இதற்குத் தமிழ் வார்த்தை ஏது?

சே :—பிராண வாயுவைப் பற்றிச் சொல்லுகிறான்.

நீ :—ஏன்? அனலம் என்று அப்பா சொன்னாரே?

வெ :—அது அப்பா வைத்த பெயர். உலகத்தில் எல்லாரும் ஆக்ஸிஜன் என்று சொல்ல நாமும் ஆக்ஸிஜன் என்றே சொன்னால் எல்லாருக்கும் பழக்கப்பட்டுப் போகாதோ?

நீ:—நன்றாயிராதே.

வெ:—என்ன நன்றாயிராமல் போகும்?

சே :—என் அபிப்பிராயம் பௌதிக ஆராய்ச்சி சாஸ்திரங்களைத் தமிழில் எழுதும்போது கூடிய வரையில் தாய் பாஷையைக் கொண்டே மொழிகள் தேடி எடுத்துக்கொள்ள வேண்டும் என்பது. ஆனால் இதைப் பற்றிச் சண்டை

---

### உஷ்! பேசாதே!




மனைவி :—"எங்க? இப்படி நெய் டப்பாவிலே 'விளக்கெண்ணெய்'ன்னு எழுதுறீங்களே!"

செட்டியார் :—"ஐயோ, கத்தாதே. எங்க நடமாட்டம் இங்கே ஜாஸ்தின்னு உனக்குத் தெரியாது?"

போடுவதில் எனக்குப் பிரியமில்லை. பிரயோஜனமும் மில்லை. எழுதுகிறவர்கள் தோன்றிய வழியில் எழுதலாம். சாகித்தியத்திற்கு யாராவது வரம்பு கட்ட முடியுமா? எது நிலைக்கிறதோ அது நிலைக்கும். அப்படியே இந்தக் கலை மொழிகளைப் பற்றியும் செய்யலாம்.

நீ :—பள்ளிக்கூடத்தில் சொல்லித் தரும் வாத்தியார்கள் என்ன சொல்லுகிறார்கள்?

சே :—ஆங்கிலத்தில் சாஸ்திரம் படித்தவர்கள் ஆங்கில மொழிகளில் பழக்கப் பட்டிருப்பதால் ஆக்ஸிஜன், நைட்ரொஜன், ஸல்பூரிக் என்றால் அவர்களுக்கு மிகச் சுலபமாகவும் அழகாகவும் தோன்றும். ஹைட்ரோக்ளோரிக் காஸிட் என்றால் அவர்களுக்கு ஒரு பழைய நண்பனைக் கண்ட மகிழ்ச்சி உண்டாகிறது. தமிழ் மட்டும் படித்து விஷயங்கள் எல்லாம் புத்தம் புதிதாகப் பார்த்துக் கஷ்டப்படுகிறவர்களுக்கு அனலம் நீரகம் என்றால் காதுக்கும் மனதுக்கும் இனிமையாக இருக்கும்.

நீ :—தமிழ் மொழியாக இருந்தால் சார்பு மொழிகள் செய்து கொள்ள முடியும். நேற்று நீங்கள் சொன்னீர்கள் அனலித்தல் அனலதை ஈரனலதை என்றெல்லாம். அதெல்லாம் ஆங்கிலப் பதங்களை வைத்துக் கொண்டால் கடினமாகுமே,

வெங்கடராமன் கொஞ்சம் அவசரமாகப் பதில் சொன்னான் :

"என்ன டிபிகல்ட்டி? — ஆக்ஸிஜன், ஆக்ஸைட், டையாக்ஸைட், என்று சொன்னால் என்ன கெட்டுப் போகும்?"

சே :—அது ஒவ்வொன்றும் ஒரு புது இடு குறியாகுமே. காரணப் பெயராக வைத்தால்தான் நன்றாகப் புரியும். மனதில் பதிந்து நினைவு வைப்பது எளிதாகும். ஆக்ஸிஜனித்தல், ஆக்ஸிஜனதை ஈராக்ஸிஜனதை என்றெல்லாம் மொழிகள் ஆக்கலாம். ஆனால் நன்றாயிராது.

வெ :—என்ன டிபிகல்ட்டி? முக்கியமான டர்ம்ஸ் இங்கிலீஷாகவே வைத்தால் போதுமே.

நீ :—எல்லாம் இந்தக் காலத்துப் பசங்களுக்கு விட்டுவிடுவதே நல்லது, சாஸ்திரிவாள்! நமக்கு என்னத்திற்குச் சண்டை?

சே :—சரி. அப்படியே செய்யலாம். வெங்கடராயா, செல்லம்மாளைப் பற்றி என்ன சொல்லுகிறாய்?

பிறகு நடந்த பேச்சுக்கள் இரசாயனத்திற்குச் சம்பந்தமில்லாதவை.

முடிவு

# ஸென்ஸாரின் கடிதங்கள்

*" தூமிலன் "*

ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு மனிதன் இருந்தான். அவன் ஒரு நாள் தன் மனைவிக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். அப்பொழுது அங்கே வந்த ஒரு நண்பன் அந்தக் கடிதத்தைத் தோள் வழியாக எட்டிப் பார்த்தான். கடிதம் எழுதியவன் ஒன்றும் சொல்லாமல் மேலும் மேலும் எழுதிக் கொண்டே போனபோது நண்பன் "என்னை ஏன் வைகிறாய்?" என்று கோபித்தான்.

"உன்னை யார் வைதது?"

"'இந்தக் கடிதத்தை ஒரு மடக் கழுதை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறது' என்று எழுதி யிருக்கிறாயே?" என்றான் நண்பன்.

"அப்படியானால் நீ இந்தக் கடிதத்தைப் படித்தாயா?" என்று கடிதம் எழுதியவன் கேட்டானாம்.

பிறர் கடிதத்தைப் படிக்கக் கூடாதென்பதை மனதில் பசுமரத்தாணி போல் பதியச் செய்வதற்காக, பாட புத்தகங்களில் இந்த முதல்தரமான மடக் கழுதைக் கதையைப் போட்டிருக்கிறார்கள்.

ஆனால் சர்க்கார் அந்தக் கதையையோ அல்லது அதன் கருத்தையோ லட்சியஞ் செய்வதில்லை. அது மட்டுமல்ல. பிறர் கடிதங்களைப் படித்துப் பார்ப்பதற்கென்றே பிரத்தியேகமாக 'ஸென்ஸார்' என்ற அதிகாரிகளை வேறு நியமித்திருக்கிறார்கள். இந்த உத்தியோகஸ்தர்கள் மட்டு மரியாதையின்றி நமது கடிதத்தைப் பிரித்துப் பார்ப்பதோடு இல்லை. பிரித்துப் பார்க்கும் கவர்களின் மேல் "ஸென்ஸாரால் பிரித்துப் பார்க்கப் பட்டது" என்று வேறு முத்திரை குத்தி அனுப்புகிறார்கள்.

சாதாரண காலங்களில் இந்த ஸென்ஸார்கள் தமாஷாக ஏதோ ஒன்றிரண்டு கடிதங்களைப் பேருக்குப் பிரித்துப் பார்ப்பது வழக்கம். ஆனால் இப்பொழுது யுத்த காலமாகையால் அவர்கள் ஏராளமான கடிதங்களைப் படித்தாக வேண்டும். ஏனென்றால் எந்தக் கடிதத்தில் என்ன இரகசியம் இருக்குமோ, யார் கண்டார்கள்?

உதாரணமாக, ஹிட்லர் தற்சமயம் எங்கே இருக்கிறாரென்று யாருக்குமே தெரியவில்லையாம். அவர் ஒருவேளை நமது இந்தியா தேசத்தில் எங்கேயாவது ஒரு வைக்கோற்போருக்கடியில் ஒளிந்து கொண்டிருக்கலாமல்லவா? இது சம்பந்தமாக 'ஐந்தாம் படை'க்காரர்களுக்குள் கடிதப் போக்கு வரத்து நடந்தால் கட்டாயம் ஸென்ஸாரிடம் அகப்பட்டுக் கொள்ளு மல்லவா? அப்புறம் ஹிட்லரைக் கைது செய்து யுத்தத்தை நாளைக்கே நிறுத்தி விடலாமல்லவா? ஆகையால்தான் ஸென்ஸார்கள் பாட புத்தகத்தில் சொல்லி யிருக்கும் மடக் கழுதைக் கதையையும் லட்சியம் செய்யாமல் நம்முடைய சொந்தக் கடிதங்களை யெல்லாம் படித்துப் பார்க்கிறார்கள்.

இப்படிப்பட்ட ஸென்ஸார் உத்தியோகம் என் நண்பன் சம்பந்தத்துக்குக் கிடைத்தது. அவன் அந்த வேலைக்கு முற்றிலும் லாயக்கானவன். ஏனென்றால் பால்ய முதலே அவனுக்கு அந்த வேலையில் நல்ல பழக்கம். அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களின் கடிதங்கள் தப்பித் தவறி அவனிடம் வந்தால் அவற்றைப் படித்துப் பார்த்து விட்டுத்தான் அவர்களிடம் கொடுப்பான். கொடுக்கும்போது, "எனக்கு வந்ததாக்குமென்று தெரியாமல் கிழித்து விட்டேன்; மன்னிக்கணும்" என்று சொல்வான். இப்போது அவன் யாருக்கும் மன்னிப்புச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லாமலே பிறர் கடிதங்களை உடைக்கும் அதிர்ஷ்டத்தை அடைந்திருந்தான். சம்பந்தம் கொஞ்சம் தமாஷ் பேர்வழி கூட. ஆகையால் அவன் உத்தியோகம் ஏற்றது முதல் பின்வருமாறு பல பேருக்குக் கடிதங்கள் பறக்க ஆரம்பித்தன :—

## 1

அன்புள்ள ராம கப்பனுக்கு!

நீ ஜபல்பூரிலிருந்து உன் தகப்பனாருக்கு எழுதிய கடிதத்தைப் படிக்க நேர்ந்தது. உனக்கு மாதா மாதம் சம்பளமாக ரூ. 400-0-0 ம் அலவுன்ஸாக ரூ. 600-0-0 ம் கிடைக்கிறதாமே? அடி சக்கை!

உன்னைப் பற்றி நினைக்கும்போது எனக்கு ஒரு பழைய பள்ளிக்கூடச் சம்பவம் ஞாபகம் வராதிருப்பதில்லை. ஒரு சமயம் பூகோள பரீட்சையில் 'அரக்கோணம்' என்ற ஊரைப் பற்றி நீ எழுதியது நினைவிருக்கிறதா? 'ஒரு முக்கோணத்தைச் சரி பாதியாக வகுத்தால் அரக்கோணம் ஏற்படும்' என்று எழுதியிருந்தாய்! அப்படிப் பட்ட கெட்டிக்காரனான உனக்கு இவ்வளவு பெரிய வேலை எப்படிக் கிடைத்தது? அந்த இரகசியத்தைச் சொன்னால் என் பிள்ளைக்கும் ஒரு வேலை பண்ணி வைக்கச் சௌகரியமாயிருக்கும். அவன் சமீபத்தில் பப்ளிக் ஸர்வீஸ் கமிஷன் முன் ஆஜரானான். 'ஏ. ஆர். பி. ஸைரன்' என்பதைப் பற்றிக் கேள்வி கேட்டதற்கு அவன் அழகாக வியாக்கியானம் பண்ணினான். ஸைரன் (Siren) என்ற ஆங்கில வார்த்தைக்கு 'இன்பகரமாகப் பாடி மரணமடையச் செய்யும் தேவதை' என்று அர்த்தம். அதே மாதிரி ஏ. ஆர். பி. சங்கின் மதுரகானத்தினால் ஜனங்கள் மரணமடையக் கூடுமாதலால் அதற்கும் அந்தப் பெயர் வந்தது என்று சொன்னானும்! அதன்மேல் அவன் இன்னும் இரண்டு ஜன்மத்துக்கு எந்த சர்க்கார் வேலைக்கும் லாயக்கில்லை என்று கமிஷனர்கள் அபிப்பிராயப்பட்டார்களாம்.

தயவு செய்து உனக்கு எப்படி வேலை கிடைத்தது என்பதைப் பற்றி மறு தபாலில் விவரமாய் எழுது.

இப்படிக்கு,
சம்பந்தம்.

குறிப்பு:

நீ என்னிடம் ஐந்து வருஷங்களுக்கு முன் கடனாக வாங்கிய முப்பது ரூபாயையும் அனுப்பி வைத்தால் சௌகரியமாயிருக்கும்.

## 2

அன்புள்ள மைத்துனனுக்கு,

உன் தங்கை ராஜம் உனக்கு எழுதிய கடிதத்தைப் பார்த்தேன். அவள் என்னைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் எழுதியிருக்கிறாள். என் பெற்றோர்களைப் பற்றி அசாவியமான புகார்கள் செய்திருக்கிறாள். ஆகையால் ஸென்ஸார் என்ற ஹோதாவில் நான் அந்த விஷயங்களின் மீது ஒரு பாட்டில் மசியைப் பூசி அனுப்பி யிருக்கிறேன்.

அவள் தனக்கு உடம்பு சரியாக இல்லையென்று எழுதி யிருப்பது சுத்தப் பொய். இன்றைக்குக் காலையில் கூட அரை டஜன் இட்டிலி தின்றாள். ஆகையால் அவளுடைய உடம்பைப் பார்த்துக்கொள்வதற்காக அவளை ஊருக்கு அழைத்துப் போவதற்கு நீ இங்கே வர வேண்டியதில்லை.

இப்படிக்கு,
சம்பந்தம்.

## 3

ஸ்ரீமான் குப்புசாமிக்கு,

நான் யாரென்று தங்களுக்குத் தெரியாது. இருந்தாலும் தங்கள் பெண்ணுக்குப் பார்த்திருக்கும் வரனைப் பற்றிச் சில விஷயங்கள் சொல்லாதிருக்க என் மனம் இடங் கொடுக்கவில்லை.

தாங்கள் தங்கள் பெண்ணுக்கு வேதாசலம் என்பவரை வரன் பேசி முடித்திருப்பதைக் கண்டு மிகவும் சந்தோஷமடைகிறேன். வேதாசலத்தை எனக்கு நன்றாகத் தெரியும். பையன் மிகவும் நல்லவன்; தங்கக் கம்பியென்றால் அசல் தங்கக் கம்பி; ரொம்பப் படித்தவன்.

வேதாசலத்தை விவாகம் செய்துகொண்டால் தங்கள் பெண்ணுக்கு ராஜயோகம் அடிக்குமென்பது நிச்சயம். அவளுக்கு வாரத்தில் குறைந்தது இரண்டு நாளைக்காவது ஒரு சக்கரவர்த்தினியாய் இருக்கும் பாக்கியம் கிடைக்கும். ஏனென்றால் வேதாசலம் வாரத்தில் இரண்டு தினங்கள் தான் அக்பர் சக்கரவர்த்தி என்று நினைத்துக்கொண்டு அதே மாதிரி பேசவும், நடிக்கவும் ஆரம்பித்து விடுவான்!

இப்படிக்கு,
சம்பந்தம்.

[ஆசிரியர் குறிப்பு:—தபாலில் வந்த மேற்படி கட்டுரையின் மேல் "ஸென்ஸார் செய்யப்பட்டது" என்ற முத்திரை குத்தி யிருந்தது. அத்துடன் ஸ்ரீ சம்பந்தம் அவர்களிடமிருந்து பின் வரும் கடிதமும் வந்தது:—"'துமிலன்' என்பவர் தங்கள் பத்திரிகைக்கு என்னைப் பற்றி எழுதிய கட்டுரையைப் பார்வை யிட்டேன். அவர் உதாரணத்துக்கு நான்கு கடிதங்கள் எழுதி யிருந்தார். நான்காவது கடிதத்தில் இந்த ஊரில் வெயில் ...... டிகிரி என்றும் ...... பனி ...... இருக்கிறதென்றும் காலநிலையைப் பற்றி முக்கியமாகக் குறிப்பிட்டிருந்தார். காலநிலையைக் குறிப்பிடுவது எதிரி விமானங்களுக்கு உபயோகப் படக் கூடுமாதலால் அந்தக் கடிதத்தை நிறுத்திக் கொண்டு விட்டேன்.—சம்பந்தம்."]




# உங்கள் மனதிற்குகந்த நறுமணமும் தொண்டைக்குக் கெடுதல் செய்யாது

டிலக்ஸ் டெனர் சிகரெட்டின் உண்மை மணத்தை நீங்கள் விரும்புவீர்கள். உயர்ந்ததும் அவசியமானதுமான பண்டங்கள் யானை விலை குதிரை விலையாக விற்கும் இந்நாளில் கூட இந்த சுகம் நிறைந்த சிகரெட்டுகள் நம்மில் பலர் வாங்கக்கூடிய விலைக்கே விற்கப்படுகின்றன. உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலையிலிருந்து செய்யப்பட்டது.

பெரிய அல்லது ஸ்டாண்டர்டு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்



BY APPOINTMENT TO THE MOST HONOURABLE THE MARQUESS OF LINLITHGOW, VICEROY AND GOVERNOR GENERAL OF INDIA

# TENOR

## de luxe CIGARETTES




உங்களது உத்தரவாதம்

டி லக்ஸ் டெனர் சிகரெட்ஸ்

ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்

**EASTERN LICENCEES — P. B. NO 9029 — CALCUTTA.**

# கர்வ பங்கம்

ஆசிரியர்: சரத் சந்திர சட்டர்ஜி]  [மொழிபெயர்ப்பு: ஆர். ஷண்முகசுந்தரம்

## அத்தியாயம் 8.

“இது என்ன, அக்கா? அழுது கொண்டிருந்தீர்களா? உங்கள் கண்கள் இரண்டும் செவ்வரளிப் பூப்போல சிவந்திருக்கிறதே?”

அம்பிகா பாபுவின் மனைவி கேட்டுக் கொண்டிருந்தாள். விமலா குப்புறப் படுத்த படியே புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். அவள் சட்டென எழுந்து கண்ணைத் துடைத்துக்கொண்டு சிரித்தாள். “அப்பா, துர்க்கா மணியின் துக்கம் நெஞ்சைப் பிளந்து விடும்போல் இருக்கிறது, மன்னி” என்றாள்.

“யார் துர்க்காமணி?”

“விளையாடாதே மன்னி; துர்க்கா மணி யாரென்று தெரியாது? எங்கே பார்த்தாலும் அவளுடைய பெயர் பிரசித்தமாயிருக்கிறது. உனக்கு அது தெரிந்தே இருக்கும்.”

இந்துமதிக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஏதோ ஒரு புத்தகத்தைப் பற்றிச் சொல்கிறதாக மட்டும் நினைத்துக் கொண்டாள். “எங்கே, புஸ்தகத்தைக் கொடு” என்று கை நீட்டினாள். புத்தகத்தைக் கையில் வாங்கியதும், அந்தப் புத்தகாசிரியர் தன்னுடைய கணவர்தான் என்பதைக் கண்டாள். முதல் பக்கத்தைப் புரட்டியதும், விமலாவுக்குச் சமர்ப்பணம் செய்திருப்பது ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. இந்து புத்தகத்தை முதலிலிருந்து கடைசி வரை புரட்டிப் பார்த்துவிட்டு வைத்து விட்டாள். கணவனால் எழுதப்பட்டு, அச்சிடப் பெற்று, சமர்ப்பணமும் கூடச் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அவளுக்கோ இதைப் பற்றித் துளிக் கூட தெரிந்திருக்கவில்லை! இந்துவின் முக மாறுதலைக் கண்டு, விமலாவுக்குப் பேச்சு ஓடவில்லை! இந்துவேதான் பேசினாள். “நாடகம், நாவல் முதலியவைகளைப் படிக்க நான் விரும்புவதில்லை, மேலும் அவைகள் எனக்கு நன்றாகவும் இருப்பதில்லை, எப்படியோ இருக்கட்டும். நன்றாயிருக்கிறது என்பதைக் கேட்க எனக்கும் சந்தோஷமாகத்தான் இருக்கிறது” என்றாள்.

அம்பிகா பாபுவினுடைய வேலைக்காரன் வந்து அவருடைய மனைவியிடம், “இன்று நீங்கள் ‘செத்த காலேஜ்’ பார்க்கப் போவதாகச் சொன்னீர்களாம். போகிறீர்களா என்பதைப் பாபுஜீ கேட்டு வரச் சொன்னார்” என்றான்.

இந்தப் பெண் வயதில் ரொம்பச் சின்னவள். ஆகையால் தலையைக் குனிந்து கொண்டு மிகுந்த வெட்கத்துடன், “இல்லை, இன்னும் அவர் உடம்பு பூர்ண சுகம் அடையவில்லை. இன்றைக்கு வேண்டாம்” என்றாள்.

வேலைக்காரன் சென்ற பிறகும் திறந்த வாய்மூடாமல் இந்து பார்த்துக் கொண்டே இருந்தாள். தன் வாழ்விலே இப்பேர்ப்பட்ட பேச்சை அவள் கேட்டதே கிடையாது.

இதற்குள் வேலைக்காரி வந்து விமலாவிடம், “பாபுஜீ, ஆபீஸிலிருந்து ஆள் அனுப்பி இருக்கிறார். ஒரு பெரிய அலமாரி ஏலத்தில் போகிறதாம். அதை எடுக்கலாமா என்று கேட்டு வரச் சொல்லி இருக்கிறார்” என்றாள்.

விமலா, “வேண்டாம் என்று சொல்லி விடு. ஒரு சின்ன ‘புக் கேஸ்’ இருந்தாலே போதும்” என்றாள், வேலைக்காரி அங்கிருந்து கிளம்பினாள்.

இந்துமதி மிகுந்த ஆச்சரியத்துடன் இதைக் கவனித்துக் கொண்டிருந்தாள். கணவன்மார்களுடைய கேள்விகள் கூட அவளுக்குப் பிரமாதமாகத் தோன்றவில்லை. ஆனால் இந்தப் பெண்கள் இட்ட ‘உத்தரவு’ ஒரு வேலைக்காரியினுடையதைப் போல் இருக்கவில்லை! அதோடு அவள் மனதில் ஏதோ ஒரு விதமான வருத்தம் உண்டாகியது. ‘எதற்காக அவர்கள் இந்தப் பெண்களிடம் இப்படிப் பணிந்து போகிறார்கள்?’ என்ற கேள்வி அவள் மனத்திடை அடிக்கடி எழுந்தது. போகிற போது விமலா மெதுவாக, “மன்னி, உண்மையிலேயே அண்ணாவின் இந்தப் புஸ்தகத்தைப் பற்றி உனக்குக் கொஞ்சம் கூடத் தெரியாதா?” என்று கேட்டாள்.

இந்துமதி ரொம்ப அலட்சியமாக. “தெரியாது. இவைகளையெல்லாம் நான் கவனித்துக் கொள்வதில்லை. நான் முழுதும் உட்கார்ந்து எழுதிக் கொண்டு

தான் இருக்கிருர். யார் இதெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பார்கள், சொல்லு! உம், ஒன்று சொல்ல மறந்துவிட்டேனே! நாளைக்கு நான் ஊருக்குப் போகப் போகிறேன்" என்ருன்.

விமலா அவசரமாக, "வேண்டாம், மன்னி! இப்போது போகக் கூடாது" என்ருள்.

"என்?"

"ஏனு? இதைக்கூடச் சொல்ல வேண்டுமா, மன்னி! அண்ணு தன் சுக துக்கத்தைப் பற்றி உன்னிடம் ஒன்றும் கலந்துகொள்வதில்லையே? இது உனக்குத் தெரியாதா? கணவனுடைய அன்பை இழந்துகொண்டிருப்பது கூட உனக்குத் தெரியவில்லையா?" என்ருள்.

இந்து அதிகக் கோபத்தோடு, "எனக்கு அதில் விருப்பமில்லை, விருப்பமில்லை என்று எத்தனை தரம் சொல்லி இருக்கிறேன்? நான் எனது அண்ணுவோடு கவலையற்று இருப்பேன். இவர் என்னை இனி எப்பொழுதும் கூப்பிடாதிருக்கட்டும்! என்னை இனியும் தொந்தரவு செய்யாதிருந்தால் போதும்!" என்ருள்.

இதைக் கேட்டு விமலாவும் கோபமடைந்தாள். "இந்தப் பெரியதனம் எல்லாம் ஆண்களுக்கு முன்னுல் காட்டு மன்னி! நான் பெண். என்னிடத்தில் காட்டாதே! உனது தாய் வீடு பணக்காரர்கள் என்று இவ்வளவு அகங்காரம் கொள்கிருய்? சரி, போவதானுல், போ. ஆனுல் ஒரு நாளைக்கு நீ இழந்துவிட்டதை உணர்வாய்! அப்போது உனக்கு உலகமே சூன்யமாகத் தோன்றும். உனக்குக் கிடைத்தது போன்ற பாக்கியம் வேறு எந்தப் பெண்ணுக்கும் கிடைக்கவில்லை என்பதை நான் உணர்வேன். ஆனுல் அதை நீயே துஷ்பிரயோகம் செய்து பாழ்படுத்திக் கொண்டாய்!" என்ருள்.

அந்தப் புஸ்தகம் விமலா கையில் தானிருந்தது. அது கண்ணில் படவும் இந்துவின் நெஞ்சு கொதித்தது. "அகங்காரம் கொள்வதற்கு ஏதாவது கொஞ்சம் இருக்கும் போதுதான் ஜனங்கள் அகங்காரம் கொள்வார்கள். நான் அழிந்து போனுல் போய்விட்டுப் போகிறேன். அதற்காக நீ துளிக்கூடக் கவலையடையாதே. நான்தான் வீணுக நின்று கொண்டு நீ சொல்வதை எல்லாம் ஏன் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்? எனக்கு இருப்பதற்கு விருப்பமில்லை, இருக்கவும் மாட்டேன். இதனுல் என்ன ஆனுலும் சரி, நான் யாரிடமும் சண்டை பிடிக்கவும் தயாராயில்லை, உதவி வேண்டவும் தயாராயில்லை" என்ருள் இந்து.

விமலா மௌனமாக இருந்தாள். அவளுடைய மன வேதனையைக் கடவுள் தான் அறிவார்! ஆனுல் அவள் இந்த அவமானமான பேச்சுக்குப் பிறகு ஒன்றும் தர்க்கம் செய்யவில்லை.

இந்து போவதற்கு அடி எடுத்து வைத்தாள். உடனே விமலா, "இரு மன்னி, நீ என்னை விட வயதில் மூத்தவள். உன்னை நமஸ்கரிக்கிறேன்" என்ருள்.

## அத்தியாயம் 9.

அன்று சாயங்காலத்திற்கு முன்பிருந்தே ஆகாயத்தில் மேகங்கள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. சிறிது நேரத்தில் மழையும் பெய்யத் தொடங்கியது. இந்து தன் பெண்ணுடன் படுக்கையில் வந்து படுத்துக் கொண்டாள். இன்று விமலாவினுடைய தங்கை கணவன் ஊரிலிருந்து வந்திருந்தான். பக்கத்து அறையில் தங்கையும் அவன் கணவனும் பேசிக் கொண்டிருப் பதைக் கேட்கக் கேட்க அவளுடைய மனத்திலே சொல்ல முடியாத வேதனை எழுந்தது.

அவள் மிதுனப்பூர் வந்து மூன்று மாதங்களாகி விட்டன. அவளுடைய தங்கையும் வந்திருக்கிருள். அவளுடைய கணவன் இந்த மூன்று மாதத்தில் குறைந்தது ஐந்து ஆறு தடவை வந்து விட்டுப் போய்விட்டான். ஆனுல் நரேந்திரனே ஒரு தடவைகூட வரவில்லை. ஒரு கடிதங் கூட எழுதி விசாரிக்கவில்லை!

சில தினங்களாக அனைவரும் இதைப் பற்றியே பேச ஆரம்பித்தார்கள். தன் தங்கை எதிரில், எங்கு இதைப் பற்றிப் பேச ஆரம்பித்து விடுவார்களோ என்று எழுந்து தன் அறைக்கு வந்து விடுவாள்.

தன் கணவன் வருவதில்லை. இதனுல் இந்து வருத்தம் அடைந்தாளா இல்லையா என்பது அவளைப் பொறுத்த விஷயம். ஆனுல் இதனுல் நேரிடும் அவமானத்தை அவள் கற்பனை கூடச் செய்து பார்க்கவில்லை. அந்த அவமானம் நிழல் போல அவளைத் தொடர்வது போலிருந்தது! கணவன் என்னை விரும்பவில்லை என்பதை அவள் யார் முன்னிலையிலும் துளிக்கூட ஒப்புக் கொள்ளவில்லை.

இது வரையிலும் அவள் தன் கணவனருகிலேயே இருந்துகொண்டு, தனது மான மரியாதைகளைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே கண்ணும் கருத்து

மாக இருந்து வந்தாள். ஆனால் இப்பொழுதோ, அன்னியர் வீட்டில், கண் மறைவில், எல்லாம் புதைந்து போயின! எவ்விதம் அவள் அதை மறுபடியும் நிலைநாட்டுவாள்? இன்று தன் சின்ன மைத்துனர் வந்ததிலிருந்து யார் என்ன பேசினாலும் அனைவரும் தன்னிடம் இரக்கம் காட்டுவதாகவே கருதினாள். கமலாவிடம் யாராவது அவள் அப்பாவைப் பற்றிக் கேட்கும் போதெல்லாம் அவளுக்குச் செத்துப் போகலாமெனத் தோன்றும். ஊர் போவதைப் பற்றி யாராவது பிரஸ்தாபித்தால் வெட்கத்தால் குன்றிப் போவாள்.

வருவதற்கு முன் அவள் கணவனிடம் எவ்வளவோ கடுமையான வார்த்தைகளைக் கூறிய பிறகு கடைசியாக, "குடும்பத்தைக் காப்பாற்றுவதற்கான யோக்யதை இல்லாததற்கு முன் என்னை அழைக்க வந்து விடாதீர்கள்" என்று சொல்லி வந்திருந்தாள்.

திடீரென அவள் கண்ணை மறைத்திருந்த திரை அகன்றது. "கமலா, ஏன்டியம்மா அழுகிறாய்?" என்று கேட்டாள்.

கமலா அழுது கொண்டே, "அப்பா உடம்புக்கு எப்படியிருக்கிறதோ!" என்று சொல்லியது.

இந்துவின் நெஞ்சு பிளந்துவிடும் போலிருந்தது. அவள் பெண்ணை மார்போடு அணைத்துக் கொண்டு விக்கிவிக்கி அழத் தொடங்கினாள்.

குழந்தையைத் தவிர அவள் அழுவது வேறு யாருக்கும் தெரியாது.

தாயார் சொல்லிக் கொடுத்ததோ என்னவோ தெரியாது; அடுத்த நாள் அதி காலையிலிருந்தே கமலா, 'அப்பாவிடம் போக வேண்டு'மென்று பிடிவாதம் செய்யத் தொடங்கினாள். முதலில் இந்து சிறிது மிரட்டிப் பார்த்தாள். கடையில் அவள் அண்ணாவிடம் சென்று, "கமலா இருக்க மாட்டேனென்கிறாள். கல்கத்தா போக விரும்புகிறாள்" என்றாள்.

"அவளை ஏனம்மா தடுக்கிறாய்? நாளைக்கே கூட்டிக் கொண்டு போ, நரேந்திரன் எப்படியிருக்கிறான்? எனக்குக் கடிதமெழுதுவதே இல்லை. உனக்காவது எழுதுகிறானா?" என்றான்.

இந்து தலையைக் குனிந்துகொண்டு பொய்யாக, "எழுதுகிறார்" என்றாள்.

"சௌக்கியமாகத்தானே இருக்கிறான்?"

இந்து அவ்விதமே தலையைக் குனிந்து கொண்டு, "ஆம்" என்றாள்.

* * *

விமலா ஆச்சரியத்துடன், "எப்பொழுது வந்தாய், மன்னி?" என்றாள்.

"இப்பொழுதுதான் வருகிறேன்."

வேலைக்காரன் வண்டியிலிருந்து இந்துவினுடைய பெட்டியை எடுத்துக் கொண்டு வந்தான். விமலா வெறுப்பை வெளிக்குக் காட்டாமல், "இன்னும் வீட்டிற்குப் போகவில்லையா?" என்றாள்.

"இல்லை, கமலாவை மட்டும் வீட்டிற்கு முன்னால் இறக்கிவிட்டு வருகிறேன். அவளுக்காக வரவேண்டியதாயிற்று. இல்லாவிட்டால் வந்திருக்கவே மாட்டேன்."

விமலா மிகுந்த துக்கத்துடன், "வராதிருந்தாலே நன்றாயிருந்திருக்கும், மன்னி; நீ வந்திருக்கவேண்டிய அவசியமே இல்லை" என்றாள்.

இந்து மிகக் கொதிப்படைந்தாள், "ஏன்?" என்று கேட்டாள்.



"இவைகளைக்கொண்டு நகைகளை மீட்டுக்கொள்..."

விமலா ரொம்பச் சாதாரணமாக, "அதை அப்புறம் கேட்டுக் கொள்ளலாம். முதலில் கை காலை அலம்பிக் கொள். நடப்பது நடந்து விட்டது. இப்போது கேட்டால்தான் என்ன? நாளைக்குக் கேட்டால்தான் என்ன? எல்லாம் ஒன்றுதான்" என்றாள்.

இந்து உட்கார்ந்து விட்டாள். அவள் முகம் வெளுத்துவிட்டது. "அது முடியாது விமலா, விஷயத்தைப் பூராவும் கேட்பதற்கு முன் ஒரு பொட்டுத் தண்ணீர் கூட வாயில் ஊற்றமாட்டேன். அவர் உயிருடன் இருக்கிறார் என்று தான் எனக்குப் படுகிறது. பிறகு அங்கு போகவேண்டிய அவசியமில்லை என்கிறாயே, அது என்ன?" என்றாள்.

விமலா சிறிது நேரம் பேசாமலிருந்து விட்டு, "உண்மையாகவே அந்த வீட்டில் இனி உனக்கு இடம் இல்லை. இனி உனக்கு இங்கு எப்படியோ அப்படியே தான் தாயார் வீட்டிலும். அந்த வீட்டில் நீ இருக்க முடியாது!" என்றாள்.

இந்து கண்ணீரை அடக்கிக் கொண்டு, "இனி என்னால் பொறுக்க முடியாது. நடந்த விஷயத்தைச் சொல்லு. கலியாணம் செய்து கொண்டாரா?" என்றாள்.

"நீ அப்படி நினைக்கிறாயா?"

"இல்லை. ஒருகாலும் நினைக்கவில்லை. எனது குற்றம் எவ்வளவு பெரிதாக இருந்தாலும் அவர் ஒருபோதும் அவ்வளவு பெரிய அநியாயத்தைச் செய்ய மாட்டார். எனக்கு ஏன் அவரிடத்தில் இடம் கிடையாது என்பதைச் சொல்ல மாட்டாயா?" என்று சொல்லச் சொல்ல இந்துவின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது.

விமலாவும் கண்கலங்கினாள். ஆனால் கண்ணீர் விடவில்லை. "உனக்கு அங்கு இனி இடம் கிடையாது என்பதை எப்படி உணர்த்துவது என்றே எனக்குப் புரியவில்லை. ஷம்பு பாபு, அண்ணாவைக் கைது செய்து விட்டார்" என்றாள்.

இந்து நடுநடுங்கினாள். "அப்புறம்?"

விமலா சொல்லத் தொடங்கினாள், "நாங்கள் அப்போது காசியி லிருந்தோம். ஷம்பு பாபு பணம் கட்டுவதற்கு இரண்டு நாள் தவணை கொடுத்திருந்தார். ஆனால் நாலாயிரம் ரூபாய் சேரவில்லை. கைது ஆனதிற்கப்புறம் அண்ணா போலா என்பவனை என்னிடம் அனுப்பினார். ஆனால் நாங்கள் அப்போது அலகாபாத்திற்குச் சென்று விட்டோம். அவன் திரும்பிப் போய் அதற்கப்புறம் வந்தான். இவ்விதம் ஒரு பத்து நாள் தாமதமாகி விட்டது. அதற்கப்புறம் நாங்கள் இங்கு வந்து சேர்ந்தோம். எங்களிடமும் அத்தனை ரூபாய் ரொக்கமாக இல்லை. எனது வைரத்தை அடமானம் வைத்து, பத்துப் பதினைந்து நாள் எங்கெல்லாமோ அலைந்து கடைசியாக அண்ணாவை விடுவித்துக் கொண்டு வந்தோம். உன்னிடமும் நாலைந்து ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ள வைரம் இருந்ததே! உனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தால் கூட இவ்வளவெல்லாம் நேர்ந்திருக்காது. அண்ணா, 'இன்னும் பத்து நாளைக்கு ஜெயிலில் இருந்தாலும் பரவாயில்லை. அவளிடம் மட்டும் பணம் கேட்கக்கூடாது' என்று சொல்லி விட்டான். இப்போது அவனிடம் சென்று என்ன செய்யப் போகிறாய்? உன்னால் அவன் எவ்வளவோ சுகம் அடைந்து விட்டான்! இனியாவது அவனை உயிரோடு விட்டுவிடு. அது தான் உனக்கும் நல்லது, அவனுக்கும் நல்லது" என்றாள்.

இந்து சிறிது நேரம் தலையைக் குனிந்து உட்கார்ந்து கொண்டிருந்தாள். பிறகு ஒவ்வொன்றாகத் தான் அணிந்திருந்த அத்தனை நகைகளையும் கழற்றி விமலாவின் காலடியில் வைத்துவிட்டு, "இவைகளைக் கொண்டு நீ உனது நகைகளை மீட்டுக்கொள், மன்னி! நான் அவரிடம் போகிறேன். இனி எனக்கு அவரிடத்தில் இடம் கிடைக்காது என்று நீ சொல்கிறாய். ஆனால் இனிமேல் தான் எனக்கு அவரிடத்தில் உண்மையான இடம் கிடைக்கும் என்று நான் சொல்கிறேன். எது இத்தனை நாளாக என்னை அவரிடமிருந்து பிரித்து வைத்திருந்ததோ அதை இன்று உனது காலடியில் வீசி எறிந்து விட்டு எனது சொந்த இடத்தை அடையப் போகிறேன். நாளைக்கு ஒரு தடவை வந்து உனது அண்ணாவையும், மன்னியையும் பார்த்து விட்டுப் போ. இப்போது நான் போகிறேன்" என்று கூறிவிட்டு வண்டியை எதிர்பார்க்காமலேயே இந்து வெளிக் கிளம்பினாள்.

"அடேடே! போலா, நீயாவது கூடப் போய் வா அப்பா" என்று சொல்லி விமலா கண்ணீரைத் துடைத்துக் கொண்டே எழுந்து வந்து வெளிக் கதவருகில் நின்றாள்.

முற்றும்.

# கர்நாடக சங்கீத வித்வான்கள்

— சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர் —

## 25. நாராயணசாமி அப்பா (தஞ்சை) மிருதங்கம்

இவர் ஆதியில் சர்க்கார் உத்தியோகம் பார்த்துக்கொண்டிருந்து பிறகு மிருதங்க வாத்தியத்தில் அபார ஖யாதியை அடைந்தவர். மிருதங்கம் வாசிக்கிறவர்களுக்கு உயர்ந்த கௌரவத்தைக் கொடுக்கும்படியானமார்க்கத்தை இவர் காட்டியவர். மிருதங்கம் வாசிப்பதில் இவர் அடைந்த ஖யாதிக்குக் காரணம் நல்ல சாரீரத்துடன் இவருக்கிருந்த உயர்ந்த சங்கீத ஞானம்தான். மிருதங்க வாத்தியத்திலிருந்து எவ்வளவு சுநாதங்கள் ஏற்படுமோ, அந்த மர்மத்தைத் தெரிந்து வெளிப்படுத்தியவர். தான ஞான விஷயத்தில் இவருடைய லட்சண ஞானத்தைக் காட்டிலும் லட்சிய ஞானம்தான் ரொம்ப உயர்வு. அக்காலத்தில் லட்சண ஞானத்தோடு விளங்கின அநேக வித்வான்கள் இவர் வாசிப்பில் திகில் அடைந்திருந்தார்கள். மிருதங்கத்தில் மீட்டு என்றும், சாப்பு என்றும், தொப்பி நாதமென்றும் சொல்லப்படுகிற நாத வித்தியாசத்தைத் தனித்தனியாய்ச் செம்மையாய் நிரூபித்துக் காண்பிப்பதுடன், இந்த மூன்று நாதங்களைச் சேர்த்து ஜனங்களை ரஞ்சிக்கச் செய்த சக்தியில் இவருக்குச் சமானம் மற்றொருவரைச் சொல்ல முடியாது.

பரத சாஸ்திர வித்வான்கள் கொளிப்பிக்கிற ஜதி மார்க்கங்கள் இவர் கையில் வெகு சுலபமாய்ப் பேசும். இவர் தொப்பியில் மா வைத்து உபயோகப்படுத்தி வலது பக்கத்தைச் சேர்த்துச் சாப்புக் கொடுத்தால் அந்த நாதமானது ஜனங்களுக்குப் பிரணவ நாதமாகவே தோன்றும். இவர் மிருதங்கத்தை வாசிக்கும் காலத்தில் சரீரத்தில் எந்த அவயவத்திலும் சேஷ்டை இல்லாமல், இவருடைய விரல்களைப் பார்த்து மிருதங்கம் வாசிக்கிறார் என்று தெரிந்து கொண்டாலொழிய, சாமான்யமாய் உட்கார்ந்து கொண்டிருக்கிற மாதிரியே தோன்றும். எவ்வளவு பெரிய வித்வான்கள் எந்தக் காலத்தில் பாடினாலும் அக் காலத்திற்கு மூன்று காலத்தையும் நிர்ணயமாக அமைத்து நாதத்தைக் கவர்ந்து கொண்டே வாசிப்பார். 'பரன்' முதலானதுகளைப் புரட்டும் காலத்தில் அதிலிருந்து சாப்பு நாதம் மாதிரி சுநாதமானது உள்ளிருந்து கவர்ந்துகொண்டே வந்து கொண்டிருக்கும்.

இவர் தன் வாத்தியமானது தனக்கு வாசிப்பதற்கு லாயக்குள்ளதா யிருக்கிறதென்று தெரிந்தாலொழிய எந்த வித பிரதிப்ரயோஜனத்தை உத்தேசித்தும் வேறு எந்தவித வாத்யத்திலும் வாசிக்கிறதே இல்லை. தவிர வித்வான்களுக்கு வாசிக்கும் முன்னமே அவர்களுடைய சுருதியைத் தெரிந்துகொண்டு அதற்குத்தக்க வாத்தியத்தைக்கொண்டு வருவார். கொண்டு வந்த பிறகு கச்சேரி செய்கிற வித்வான், வாத்தியத்தின் சுருதி கூடக் குறைச்சலாக இருக்கிறதென்று சொன்னால் அவருக்குத் தக்கபடி இவர் மிருதங்கத்தை சுருதி செய்யமாட்டார். தான் கொண்டு வந்திருக்கும் மிருதங்க சுருதிக்குக் கச்சேரி செய்ய வேண்டுமென்று சொல்லிச் செய்யச் சொல்வார். ஏனென்றால் மிருதங்கத்தை ஒரு சுருதியில் தயார் செய்ய வேண்டியிருந்தால், அந்த 'சுருதி' செய்கிற வேலையை, மிருதங்கம் கட்டித் தயார் செய்கிற ஜாதியரைக் கொண்டே செய்கிற வாடிக்கையே தவிர தன் கையால் சுருதி சேர்க்கிற வாடிக்கையே கிடையாது. அநேக சுருதிகளுக்குத் தக்கபடி வாத்தியங்கள் இவரிடம் ஏராளமாயிருந்தபடியால் இவர் தொழிலைச்சிரமமன்னியில் நடத்தும்படி ஏற்பட்டது. ஒரு சமயம் என் ஜாகையில் உத்ஸவப் பிரமயத்தில் என்னுடைய கதைக்கு இவரை வாசிக்க வேணுமென்று கேட்டுக் கொண்டேன். என்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கி வாத்யம் சஹிதம் வந்திருந்தார். ஆனால் அவர் கொண்டு வந்த வாத்தியத்தின் சுருதியானது என்னுடைய சுருதிக்கு ஒரு ஸ்வரம் கம்மியாக யிருந்தது. "கொஞ்சம் மிருதங்கத்தை ஏற்ற வேணும், அப்பா!" என்று நான் கேட்டுக் கொள்ள அவர் "சாத்யப்படாது" என்று தெரிவிக்க, கடைசியில் அவர் கொண்டு வந்த மிருதங்கச் சுருதியிலேயே நான் கதை செய்தேன்.

தன்னுடைய யோக்யதையை அனுசரித்துத் தனக்கு எவ்வளவு பெருமை

வகிக்க வேணுமென்று தோனுகிறதோ அதற்குப் பதின்மடங்கு வகித்துக் காலம் கழித்து வந்தார். இவர் தன்னுடைய ஜாகையில் பிரதி சனிக்கிழமைதோறும், ஒரு பஜனை மகோத்ஸவம் நடத்தி வந்தார். இந்த பஜனையின் விமர்சையைச் சுருக்கிச் சொல்லின், இவர் ஸ்ரீ ராமபிரானிடத்தில் வைத்திருக்கிற அன்பு மேலிட்டு விசேஷ செலவுடன் செய்து வந்தார். இந்த பஜனையில் இவரே மிருதங்கம் வாசித்துக்கொண்டு கானம் செய்ததானது, சர்வ ஜனங்களையும் ரஞ்சிக்கச் செய்யும். கட்டிடத்திற்கு வெளியிலிருந்து கேட்கிறவர்களுக்கு, ஒருவர் பாடுகிறாப் போலேயும் மற்றொருவர் மிருதங்கம் வாசிக்கிறாப் போலேயும் தோன்றும்: வட தேசத்துப் பாவாக்கள் செய்த பஜனையை இது அனுசரித்தது. ஆகையால் அநேக ஜமீன்தார்கள் பிரபுக்கள் இவர் ஜாகைக்கு வந்து பஜனையைக் கேட்டு ஆனந்திப்பார்கள். வித்வான்கள் இந்த பஜனையில் பாட ஆசைப்படுவதுண்டு. சிலர் இந்த பஜனையின் சுநாதத்தைக் கண்டு பிரமித்துப் பாடாமலே பயந்து போவதுமுண்டு. ராமநாதபுரம் சமஸ்தானத்தில் ஜமீன்தாராக விளங்கின பாண்டித்துரை அவர்கள் இந்த பஜனையைக் கேட்டு ஈடுபட்டு இதற்காக அநேக வருஷ காலம் லௌகிக ஒத்தாசையும் செய்து வந்தார். அப்பா அவர்கள் காயகர்களுக்கு வாசிப்பதைக் காட்டிலும் வாத்தியங்களுக்கு வாசிப்பது மிக்க ஆச்சர்யகரமானது. தந்தி வாத்தியங்களின் பெருமையைக் கெடுக்காமல், அந்த வாத்திய நாதத்திற்குள் மிருதங்க நாதத்தை நுழைத்து வாசிப்பது இவரைப்போல் மற்றொருவருக்கும் சாத்தியப்படாது என்றே சொல்லலாம்.

பெரிய சங்கீத வித்வான்களுக்கு ஏற்பட்டிருந்த கௌரவத்தைக் காட்டிலும் அதிக கௌரவத்தை இவர் அடைந்து தக்க மனிதர்களால் கொண்டாடப்பட்டார். இவருடைய இரு நேத்திரங்களுக்கும் சிகிச்சை செய்ய வேண்டியிருந்தபோது, மகா யோக்கியவானான ஹைகோர்ட் ஜட்ஜு மணி ஐயரவர்கள் இவரைச் சென்னையில் தம் ஜாகையிலேயே வைத்துக் கொண்டு அபார உபசரணைகள் செய்து, தக்க வைத்தியர்களைக் கொண்டு சிகிச்சை செய்து அனுப்பினார்.

# மாயக் கடிதம்

"ஸோமாஸ்"

தென்னை மரத்தில் தேள் கொட்டப் பனைய மரத்தில் நெறி கட்டிக்கொண்டதைப் போல், "கல்கத்தாவில் குண்டு வீச்சு" — "மறுபடியும் கல்கத்தா தாக்கப்பட்டது" என்றெல்லாம் பத்திரிகைகளில் படிக்கும் பொழுது ஸ்ரீதரன் உடம்பு நடுங்கிற்று.

பிரேமாவின் மேல் எறும்பு ஊர்ந்தால் கூட அவனுக்குப் பொறுக்காது. தன் மீது குண்டு விழுவதை அவன் பொருட்படுத்தவில்லை. பிரேமாவின் மீது விழாமலிருக்க வேண்டும் என்பதுதான் அவன் பிரார்த்தனை. ஆகவே, யுத்தக் குழப்பம் ஒருவாறு முடிகிற வரையில் நிம்மதியாக அவள் கிராமத்திலேயே இருக்கட்டுமென்று தீர்மானம் செய்துவிட்டான் ஸ்ரீதரன்.

வாரம் ஒரு கடிதம் பிரேமாவுக்கு எழுதத் தவற மாட்டான் ஸ்ரீதரன். பிரேமாவும் பதில் எழுதத் தவற மாட்டாள். ஆனால் ஒரு மாத' காலமாக ஸ்ரீதரன் எழுதிய கடிதத்துக்குப் பதில் வரவே இல்லை. பதில் வந்தாலும் ஐந்தாறு வரிகளில் சுருக்கமாக எழுதி விடுவாள். ஸ்ரீதரனுக்கு இது கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. "கடிதத்துக்குப் பதில் எழுதக் கூடச் சாவகாசமில்லாமல் அவளுக்கு அப்படி யென்ன வேலை அங்கே தட்டுக் கெட்டுப் போகிறது?" என்று நினைத்துப் பொருமினான்.

அன்று பூங்குளத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. ஸ்ரீதரன் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான்.

"...... உங்கள் பிரேமாவுக்கு வரவர அவகாசமே கிடைப்பதில்லை. அதற்குக் காரணம் இந்த ஊருக்குப் புதிதாக வந்திருக்கும் டாக்டர் தான். சதா காலமும் பிரேமாவுக்கு அந்த டாக்டருடன்தான் பேச்சு. அந்த டாக்டரும் பிரேமாவை விட்டு நகருவதில்லை.

இப்படிக்கு,
உண்மை விளம்பி."

கையெழுத்தில்லாத இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் ஸ்ரீதரனுக் குண்டான கோபத்துக்கு அளவில்லை. அவனுக்கு மீசை இருந்தால் அவசியம் துடித்திருக்கும்.

ஊருக்கு அழைத்துக்கொண்டு போய் விடும் பொழுது தன்னை விட்டுப் பிரியவே மாட்டேனென்றாளே! ஆகா! ஒவ்வொரு கடிதத்திலும் எவ்வளவு அன்பு பாராட்டி எழுதினாள்! மாய்மாலக்காரி! அவளை .........! என்று நினைக்கும்பொழுது ஸ்ரீதரனுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை.

கடிதத்தில் எழுதியிருக்கும் எழுத்து யாருடையது என்று தெரியவில்லை. அவனும் அதைப் பற்றி நினைத்து மூளையைக் குழப்பிக் கொள்ள விரும்பவில்லை. உடனே ஒரு வாரம் லீவு எழுதிப் போட்டுவிட்டுப் பூங்குளத்துக்குக் கிளம்பி வந்து சேர்ந்தான்.

தெருக்கோடியில் அகஸ்மாத்தாக வந்து கொண்டிருந்த கிட்டு, "அத்திம்பேரே, எப்போ வந்தீர்கள்? கடிதாசு போடப் படாதோ? வண்டிக்காரனை ஸ்டேஷனுக்கு வரச் சொல்லியிருக்கலாமே!" என்று சொல்லிக் கொண்டே, ஸ்ரீதரனின் கையைப் பிடித்துக் கொண்டான்.

"இல்லே. திடீரென்று ஒரு காரியமாகப் புறப்பட்டு வந்தேன். சரி, அக்கா சௌக்யம் தானே?" என்று ஸ்ரீதரன் சற்றுக் கோபமாகக் கேட்டான்.

கிட்டு, சிரித்துக் கொண்டே, "சௌக்யத்துக்கு என்ன குறைச்சல்? அப்படித்தான் உடம்புக்கு வந்தால் என்ன? இருக்கவே இருக்கிறார் டாக்டர்! இருபத்திநாலு மணி நேரமும் டாக்டர் நம் வீட்டில் பாரா கொடுக்கும்போது எந்த வியாதி தைரியமாக உள்ளே நுழைய முடியும்?" என்றான்.

'டாக்டர்' என்றதும் ஸ்ரீதரனின் வயிற்றிலிருந்து நெருப்புப் பந்து மாதிரி ஏதோ கிளம்பிக் 'குபு குபு' வென்று தொண்டைக்கு வருவது போல் தோன்றியது.

"டாக்டரா? அது யாரது?"

"என்னமோ தெரியாததுபோல் கேட்கிறீர்களே!"

"யார் அது சொல்லு."

"நிஜமாகவே உங்களுக்குத் தெரியாதா?" என்றான் கிட்டு.

இதற்குள் யாரோ "மாப்பிள்ளை இப்போ தான் வராப்பலே இருக்கு" என்று விசாரித்துக் கொண்டு வரவே, ஸ்ரீதரன் பேச்சை மாற்ற வேண்டியதாயிற்று.

வீடு வந்ததும் கிட்டு மள மளவென்று உள்ளே சென்றான். ஸ்ரீதரனும் மெதுவாக உள்ளே போய் வாசற் புறத்து அறைக்குள் நுழைந்தான்.

உள்ளே மேஜை ஒன்று நன்றாக அலங்கரிக்கப்பட்டு மேலே புஷ்பக் கொத்துடன் விளங்கியது. கோட் ஸ்டாண்டில் ஒரு அழகிய குடையும் 'ஸ்டெதஸ் கோப்'பும் மாட்டப்பட்டிருந்தன. ஸ்ரீதரனுக்கு அவைகளைப் பார்த்ததும் இருதயமே நின்று விடும் போலிருந்தது. அறை முழுவதும் சுழல ஆரம்பித்தது. "ஓஹோ, இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா?" என்று நினைத்தான் ஸ்ரீதரன்.

"என்ன அத்திம்பேரே, பேசாமல் நிற்கிறீர்களே! வாருங்கள் உள்ளே! அக்கா டாக்டருடன் பேசிக் கொண்டிருக்கிறாள்!" என்ற கிட்டுவின் குரல் ஸ்ரீதரனுக்கு இந்த உலகப் பிரக்ஞையைக் கொடுத்தது.

மளமள வென்று கிட்டுவுடன் ஸ்ரீதரன் உள்ளே சென்றான். அதற்குள் பிரேமா எதிரே வந்து, "வாருங்கள், ஒரு கார்டு எழுதப் படாதோ? வண்டிக்காரனை ஸ்டேஷனுக்கு அனுப்பி யிருப்பேனே?" என்றாள்.

ஸ்ரீதரனுக்குப் பிரேமாவின் பேச்சு வேம்பா யிருந்தது. அவன் கண்கள் அந்தக் கிராதகன்—டாக்டரையே தேடின; பல்லைக் கடித்துக் கொண்டு இங்கு மங்கும் பார்த்தான்.

பிரேமா உள்ளே போய்விட்டு, நாகரிகமாக உடுத்திக் கொண்டிருந்த ஒரு ஸ்திரீயுடன் வந்தாள். அவளுக்கு வயது இருபத்தைந்து இருக்கும்.

"இவர் தான் நம்ம ஊருக்குப் புதிதாக வந்திருக்கும் டாக்டர் ஸ்வர்ணம் உமாபதி. நல்ல கைராசி. என்னிடம் அத்யந்தப் பிரேமை. தினம் உங்களைப் பற்றித் தான் பேசிக் கொண்டிருப்போம்..............!" என்று பிரேமா சொல்லிக் கொண்டே போனாள்! ஸ்ரீதரனுக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. அசட்டுச் சிரிப்புடன், "ரொம்ப சந்தோஷம். இவரைப் பற்றி எனக்கு நீ எழுதவே இல்லையே!" என்று கூறிக் கொண்டே பிரேமா கொடுத்த காப்பியைச் சாப்பிட்டான்.

அவனுடைய கோபமெல்லாம் அவனுக்குக் கடிதம் எழுதிய அயோக்யனிடம் திரும்பி விட்டது.

கிட்டு ஓடி வந்து "அத்திம்பேரே, காப்பி சாப்பிட்டாயிற்றா? கொஞ்சம் இங்கே வந்து இந்த ஸைக்கிளை ரிப்பேர் பண்ணிக் கொடுக்களேன்!" என்றான்.

ஸ்ரீதரனுக்குச் சட்டென்று ஒரு சந்தேகம் உதித்தது. அந்த சந்தேகம் உதித்ததும் கிட்டுவை விழுங்கி விடுபவன் போல் பார்த்தான். "கிட்டு, நிஜத்தைச் சொல்லி விடு. இந்தக் கடிதம் எழுதியது நீ தானே? ஏண்டா விழிக்கிறாய்?" என்றான்.

கிட்டு, "நான் பொய் சொல்லவில்லை, அத்திம்பேரே! 'உண்மை விளம்பி' என்று தானே கையெழுத்துப் போட்டிருந்தேன்? தவிர நான் கடிதத்தின் பின் பக்கத்தில் 'இந்த டாக்டர் ஒரு லேடி டாக்டர்' என்று எழுதியிருந்தேன். உங்களுக்கு வரும் கோபத்தில் நீங்கள் பின்புறம் பார்க்க மாட்டீர்களென்று எனக்குத் தெரியுமே! — அது கிடக்கட்டும். நான் கடிதாசு போடாமற் போனால் நான் தான் என் ஸைக்கிளை ரிப்பேர் செய்து கொள்ள முடியுமா? அல்லது நீங்கள் தான் அக்காளைப் பார்க்க முடியுமா?" என்றான்.

"ஏன் பார்க்க முடியாது?" என்று கேட்டுக்கொண்டே பிரேமா வரவே, கிட்டு ஓடிப் போய்விட்டான்.

# பெண்கள் உலகம்

"லக்ஷ்மி"

## 5. அகிலாண்டம்

மன்னிக்குப் பெரிய வீட்டுப் பெண்களிடம் சிநேகிதமாக இருக்கிறோமென்று சொல்லிக் கொள்வதில் மிகவும் பெருமை. நவராத்திரி உற்சவத்தின் போது அவளுக்குத் திவான்பகதூர் நாராயணசாமி ஐயரின் மனைவி அகிலாண்டத்தம்மாள் சிநேகிதமானாள். வீட்டில் எதற்கெடுத்தாலும் அகிலாண்டம் அப்படிச் சொன்னாள் என்று மன்னி சொல்லிக் கொண்டிருப்பதைக் கேட்டு என் காது புளித்துப் போய் விட்டது.

அன்று வரலக்ஷ்மி பூஜையின் மறு தினம். அதாவது அம்மனை வைத்துப் பாடுவதாகச் சொல்லிப் புருஷர்களின் கண்ணில் மிளகாய்ப் பொடியைத் தூவி விட்டு ஸ்திரீகள் பலர்கூடி வம்பு பேசும் சுப தினம்.

"இப்பவாவது எங்காத்துக்கு வரவழி தெரிஞ்சுதே?" என்று மன்னியின் குதூகலமான குரல் உச்சஸ்தாயியில் கூடத்திலிருந்து ஒலித்தது.

"என்ன வெளியிலே கிளம்பறதுன்னு லேசா இருக்கா?" என்று மற்றொரு குரல் திணறிக்கொண்டே பதிலளித்ததைக் கேட்டதும் நான் வியப்புடன் திரும்பிப் பார்த்தேன்.

"அகிலாண்டம் வந்திருக்கா! நல்ல பெரிய தேங்காயாகப் பார்த்துச் சாமான் உள்ளே யிருந்து எடுத்துண்டு வா" என்று மன்னியின் மெல்லிய குரல் என்னை உத்தரவிட்டது.

அகிலாண்டத்தம்மாள் மூச்சு விடக் கஷ்டப்பட்டுக் கொண்டு கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டாள். பெரிய மனுஷர்கள் வீட்டுப் பெண்களைத் தரையில் உட்கார வைக்கக் கூடாது என்பது மன்னியின் கொள்கை.

"என்ன பத்மா? இந்த வரலக்ஷ்மி பூஜைக்கு ஏதாவது புடவை கிடவை வாங்கினியா?" என்று கேட்ட வண்ணம் அகிலாண்டம் கழுத்தில் போட்டிருந்த வைர அட்டிகையை சரிப்படுத்திக் கொண்டாள்.

அவளுடைய சரிகை மயமான நீலப் பட்டுப் புடவையை ஆவல் ததும்பும் கண்களுடன் பார்த்த மன்னி "இல்லை, வாங்கலை. அப்பா நவராத்திரி யப்பத் தான் ஒரு புடவை வாங்கி அனுப்பிச்சா. அதுக்குள்ளே மறுபடியும் இப்போ..." என்று தடுமாறினாள். அவள் கன்னங்கள் புடவை வாங்கவில்லை என்ற குற்றத்தை ஏற்றுக் கொள்ள வெட்கப் படுவது போல் சிவந்தன.

"போன வாரம் ஜஸ்டிஸ் சேஷாஜலம் ஆத்துக்குப் போயிருந்தேன். மாந்துளிர் மேக வர்ணத்தில் கருப்பு மல்லிகை மொட்டுக்கட்டி மூணு விரல் ஜரிகைக் கரை போட்ட புடவை வாங்கியிருந்தாள் ருக்மணி. விலை எழுபத்தஞ்சு ரூபாதான்" என்று லேடி அகிலாண்டம் அலக்ஷியமாகப் பேசினாள்.

பேச்சை மாற்றும் பொருட்டு மன்னி சிறு குழந்தைபோல் "நீங்க வரேன்னு சொல்லிட்டு இப்பவாவது எங்காத்துக்கு வந்தேளேன்னு எனக்கு ரொம்ப சந்தோஷமா யிருக்கு" என்று சம்பந்தமில்லாமல் கூறினாள்.

"எங்கே வரத்துக்கு ஒழியறது? வெளியிலே போகணும்னு ஏதாவது வேலை இருந்துண்டுதான் இருக்கு. வனஜாவுக்கு இரண்டு நாளா உடம்பு சரிப்படாத போயிடுத்து. அதனாலே ரொம்பக் கவலைப்பட்டுப் போயிட்டேன்" என்றாள் அகிலாண்டத்தம்மாள். அவள் முகத்தில் சினிமா நடிகைகள் முகத்தில் தோன்றி மறையும் உணர்ச்சி அலைகளைப் போன்று கவலைக் குறிகள் தோன்றி மின்னலைப் போல் மறைந்தன.

"வனஜாவுக்கு என்ன வந்துடுத்து அப்படித் திடீருன்னு? அன்னிக்கு மஞ்சக் குங்குமத்துக்கு வந்தபோது கூட ஓடி விளையாடிண்டு இருந்ததே!" என்றாள் மன்னி மிகவும் கவலையுடன்.

"என்னத்தைத் தின்னுதோ என்னவோ, முந்தா நாள் நான் சினிமாவுக்குப் போயிட்டு வந்தப்போ 'வனஜா'ன்னு கூப்பிட்டேன். சத்தமேயில்லை. உள்ளே போய்ப் பாத்தா சோபாவிலே சுருண்டு போய்ப்படுத்துண்டு இருந்தது. டாக்டர் வந்து ஏதோ மருந்து கொடுத்தார். இரண்டு நாளாக் கண்ணை முழிச்சுப்

பார்க்கலே. ஒரு வாய் பால் கூடச் சாப்பிடலே. வீட்டிலே இப்படி ஒரு கஷ்டத்தை வச்சுண்டு வெளியே கிளம்ப மனசு வரதா?" என்று முகத்தை ஆட்டிக் கொண்டே கேட்டாள் அகிலாண்டம்.

"ஐயோ பாவம்! வனஜா ரொம்ப சமத்தாச்சே!" என்று பிரலாபித்தான் மன்னி.

"நேத்திக்குக் கொஞ்சம் உடம்பு தேவலே. ரெண்டு வாய் பாலுஞ் சாதம் சாப்பிட்டது. வனஜா பிழைத்தெழுந்தா வைத்தீஸ்வரனுக்கு அபிஷேகம் பண்ணிவைக்கிறேன்னுகூட வேண்டிண்டேன்" என்று சொல்லி விட்டு அகிலாண்டம் பெருமூச்சு விட்டாள்.

"ஒரு வருஷம்போல் நம்ப கிட்ட வளர்ந்துட்டு செத்துப்போரதுன்னா மனசுக்கு ரொம்பக் கஷ்டந்தான்" என்று பத்மா முணுமுணுத்தாள்.

"ஒரு வருஷத்தோட போவானேன்? போன ஐப்பசியோட ஒரு வருஷம் இரண்டுமாச மாச்சு. என்ன சமத்துத் தெரியுமா? வனஜான்னு கூப்பிட்டாப் போரும். ஆசையோடு ஓடிவந்து மடிமேலே ஏறி உட்காந்துக்கும். பக்ஷணத்தைப் பண்ணிக் கண் முன்னால் கீழே வச்சால் கூட, நான் எடுத்துக் கொடுத்தால் ஒழிய அது கிட்டப் போகாது. அதுக்கு என்ன புத்திசாலித்தனம் போ! இவ்வளவு வயசான நமக்குக் கூட சமய சந்தர்ப்பத்தை ஒட்டி நடந்துக்கத் தெரியாது. கேட்டுக்கோ, ஒரு நாளைக்கு மேஜைமேலே ஏறி விளையாடி அவருடைய மூக்குக் கண்ணாடியைத் தள்ளி உடச்சுடுத்து. அவருக்குக் கோபம் தாங்காமல் பிரம்பை எடுத்து ரெண்டு தட்டுத் தட்டி விட்டார். அவ்வளவுதான்; மூணுநாள் அவர் எதிரே வரமாட்டேன்னுடுத்து" என்று பெரிய பிரசங்கத்தை முடித்துவிட்டு ஆசுவாசப்படுத்திக் கொண்டாள் அகிலாண்டம்.

"ஆமாம்! வனஜாவுக்கு ரொம்ப புத்திசாலித்தனம் உண்டு. நான் ரெண்டு நாள் உங்காத்துக்கு வரத்துக்குள்ளே எங்கிட்ட கூட ரொம்ப சிநேகிதமாயிடுத்து" என்று மன்னி அகிலாண்டத்துடன் ஒத்துப் பாடினாள்.

"நாழியாயிடுத்து. இன்னும் ஸர் விஜயராகவனாத்துக்குப் போகணும். என்று சொல்லிக்கொண்டு மலைப் பாம்பைப் போல் பெருமூச்சு விட்டுக் கொண்டு எழுந்திருந்தாள் அகிலாண்டம்.

"இதோ வந்துட்டேன். வெற்றிலை பாக்கு வாங்கிக் கொள்ளுங்கள்" என்று என்மேல் தடுக்கி விழாத குறையாய்ப் பத்மா என் கையிலிருந்த பெரிய தேங்காயைப் பிடுங்கிக்கொண்டு ஓடினாள்.

அகிலாண்டத்தம்மாள் போன பின்பு நான் மன்னியைப் பார்த்து "ஸ்திரீகள் தங்கள் குழந்தைகளைப் பற்றிப் பெருமை அடித்துக் கொள்வது மிகவும் சகஜம் போலிருக்கு. அகிலாண்டந் தம்மாள் இன்னும் சித்த நேரம் இங்கே உட்கார்ந்திண்டு வனஜாவைப் பத்திப் பேசிண்டு இருந்தால் ஒரு கல்தா கொடுத்து வெளியேற்றி யிருப்பேன். என் காது புளிச்சுப் போச்சு" என்று சொல்லி விட்டு முகத்தை வலித்தேன்.

"அகிலாண்டத்தம்மாளுக்குக் குழந்தை குட்டிகள் ஒண்ணும் கிடையாது பாவம்" என்று மன்னி அங்கலாய்த்துக் கொண்டாள்.

"பின்னே வனஜா? வளர்ப்புப் பெண்ணு!" என்று கேட்டேன்.

"நன்னாருக்கு வனஜாங்கரது அவாத்து நாய்க்குட்டி" என்று மன்னி என் அறிவீனத்தைச் சகிக்காதவள் போன்று தோளை ஒரு குலுக்குக் குலுக்கினாள்.

என்னைத் தூக்கி வாரிப்போட்டது. ஸ்திரீகளின் மனோதத்துவம் மிகவும் விசித்திரமானதுதான்.

"ஒரு நாய் பூனை இதுகள் மேலே எல்லாம் உங்கள் வர்க்கத்தாருக்கு இவ்வளவு பிரேமையா?" என்று மன்னியைக் கிண்டலாகக் கேட்டேன்.

"எதுவா யிருந்தாலென்ன? பழகிப் போன வஸ்து ஒசத்திதான். அண்ணாவும் நானும் வடகரையில் இருந்தப்ப ஒரு அழகான அம்மி விலைக்கு வாங்கிப் போட்டிருந்தேன். அண்ணாவுக்கு மாத்தலான சமயத்தில் அதை எடுத்துண்டு வர முடியலே. அதை விட்டுட்டுவரத்துக்காக நான் ஒரு மணி நேரம் அழுதிருப்பேன்" என்றாள் மன்னி.

"இதோ பார் மன்னி! நீ இப்படி மரம் மட்டை, கல்தூண், அம்மி இதுகள்மேல் ஆசையை விணாக்கினால், அப்புறம் அண்ணாமேல் விணாக்க அன்பு கொஞ்சங் கூட இருக்காது. ஜாக்கிரதை" என்றேன் நான்.

"போடா அசத்து! நாளைக்கு வரப் போறவளுக்கு இப்படியெல்லாம் உபதேசி!" என்று சொல்லி விட்டு மன்னி மானைப்போல் மறைந்தாள்.

முருகிற் சிவந்த கழுநீரும்
முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழல்மடவீர் !
செம்பொற் கபாடந் திறமினே

[ முருகு : தேன் ; சிவந்த கழுநீர் : செங்கழுநீர்ப் பூ : குழல் மடவீர் : கூந்தலையுடைய பெண்களே ; கபாடம் : கதவு. ]

கவிச் சித்திரம்—8

—கலிங்கத்துப்பரணி.






# பாலுவின் குதிரை சவாரி

அந்த ஊருக்குப் புதிதாகக் குடை ராட்டினம் வந்திருந்தது. குழந்தைகளுக்கெல்லாம் வெகு சந்தோஷம். அந்தக் குடை ராட்டினத்திலுள்ள யானை, குதிரை, புலி, சிங்கம் நாற்காலி—இவற்றைப் பார்த்துப் பார்த்து ஆனந்தப் பட்டார்கள். அதில் உட்கார்ந்து கொண்டு சவாரி செய்யக் காலணாதான் கொடுக்க வேண்டும். குழந்தைகள் கட்டணத்தைச் செலுத்தி விட்டுத் தங்களுக்குப் பிடித்த மிருகங்கள் மீது உட்கார்ந்து கொண்டார்கள். குடை சுற்ற ஆரம்பித்ததும், யானை, குதிரை எல்லாமும் வேகமாகச் சுழல ஆரம்பித்தன. அவற்றின் மீது உட்கார்ந்திருந்த குழந்தைகள் "ஆஹா! என்ன வேகம்!" "பலே ஜோர்" என்றெல்லாம் கூச்சலிட்டுச் சந்தோஷப் பட்டார்கள்.



இந்த வேடிக்கைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான் பாலு. அவனுக்கும் ராட்டினத்தில் உட்கார்ந்து சவாரி செய்ய வேண்டுமென்று ஆசை. அப்பாவைக் கேட்டுக் காசு வாங்கிக்கொண்டு வருவதற்காக வீட்டுக்கு ஓடினான்.

"பாலு! இப்பொழுது உனக்கு உடம்பு சரியாக இல்லை. குடை ராட்டினத்தில் சவாரி செய்யக் கூடாது" என்று அப்பா சொன்னார். "இல்லை, இல்லை. என்னைக் கூட்டிக் கொண்டு போகாவிட்டால் நான் அழுவேன்" என்றான் பாலு. எவ்வளவு நன்றாக அவனால் அழ முடியும் என்பதைக் காண்பிப்பதற்காக அப்பொழுதே கொஞ்சம் அழுதும் காண்பித்தான். கடைசியில் தகப்பனார் அவனை அழைத்துக் கொண்டு ராட்டினம் இருந்த இடத்திற்குப் போனார்.

பாலுவுக்குக் குதிரை சவாரி செய்வதென்றால் ரொம்ப ஆசை. பாலு ராட்டினக் குதிரையில் ஏறி உட்கார்ந்து கொண்டான். குதிரை சுழல ஆரம்பித்ததும் அவனுக்குச் சந்தோஷம் தாங்க



வில்லை. உற்சாகத்தால் 'ஹா, ஹா' என்று கூச்சல் போட்டான்.

குதிரை வேகமாகச் சுற்ற ஆரம்பிக்கவே பாலு அதன் கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். திடீரென்று குதிரை அது இருந்த இடத்தை விட்டு ஆகாயத்தில் பறக்க ஆரம்பித்தது. பாலுவுக்கு ஆச்சர்யமாயிருந்தது. ராட்டினத்தில் இருந்த குதிரை திடீரென்று ஆகாயத்தில் எப்படிப் பறக்க முடியும்? அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஒற்றைக் கையால் அதன் கழுத்தைப் பிடித்துக் கொண்டு மற்றொரு கையால் அதன் விலாப்பக்கத்தைத் தடவிப் பார்த்தான். பெரிய இறக்கை முளைத்திருந்ததைப் பார்த்துத் திடுக்கிட்டான். குதிரை மேக மண்டலத்துக்கு மத்தியில் வெகு வேகமாகப் போக ஆரம்பித்தது.

மேகத்தை யெல்லாம் தாண்டிக் கொண்டு குதிரை ஒரு அழகான தோட்டத்திற்கு வந்து நின்றது. 'கலகல' வென்று அப்பொழுது சத்தம் கேட்டது. பாலு சுற்று முற்றும் பார்த்தான். ஏழெட்டுக் குழந்தைகள் தன்னைப் பார்த்துச் சிரிப்பதைக் கண்டான். "அம்பி! கீழே இறங்கி வா, விளையாடலாம்" என்று ஒரு குழந்தை கூப்பிட்டது. பாலு கீழே இறங்கினான். எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டு நர்த்தனம் செய்ய ஆரம்பித்தார்கள்.

பிறகு, அந்தக் குழந்தைகளுடன் சேர்ந்துகொண்டு பாலு, 'பலிங் சடுகுடு.' கண்ணாமூச்சி முதலிய விளையாட்டுக்களெல்லாம் விளையாடினான்.

"அம்பி! இந்தா, இந்தப் பழங்களையெல்லாம் சாப்பிடு!" என்று ஒரு குழந்தை ஒரு கூடை நிறையப் பழங்களைக் கொண்டு வந்து பாலுவிடம் கொடுத்தது. மாம்பழம், வாழைப் பழம், ஆரஞ்சுப் பழம், பேரிச்சம் பழம் எல்லாம் அதில் இருந்தது. பாலுவுக்கு பழம் என்றால் ரொம்பவும் பிரியம். அதுவும் பேரிச்சம் பழத்தில் அவனுக்கு உயிர். அந்தப் பழங்கள் எல்லாம் தங்க நிறமாக இருந்தன, "ஏன்? எடுத்துக் கொள்ளேன்!" என்று குழந்தைகள் கேட்டுக் கொண்டார்கள். "வேண்டாம். எனக்குப் பசியே இல்லை. இங்கே இருந்தால் பசி, தூக்கம் ஒன்றும் வர மாட்டேன என்கிறது. எப்பொழுதும் சந்தோஷமாகவே இருக்கிறது" என்று கூறினான் பாலு.

"இந்த இடத்தில் அப்படித்தான் இருக்கும். நாங்கள் அதனால்தான் சந்தோஷமாக இருக்கிறோம்" என்றது ஒரு குழந்தை.

"எல்லோரும் இங்கே வர முடியாது. நீ அதிருஷ்டசாலி யானபடியால்தான்



இங்கே வந்திருக்கிறாய்" என்றது மற்றொரு குழந்தை.

இப்படிப் பேசிக்கொண்டே வரும் போது அந்தக் குழந்தைகளையும் தன்னையும் பாலு மாறி மாறிப் பார்த்தான். அவற்றின் தலை மயிர் 'பளபள' வென்று இருந்தது. உடம்பெல்லாம் தங்கம் மாதிரி இருந்தது. "நான் ஏன் உங்கள் மாதிரி இல்லை?" என்று கேட்டான். "நீயும் இங்கேயே இருந்து விட்டால் எங்கள் மாதிரி ஆகி விடுவாய். எங்களுடன் இங்கேயே இருந்து விடுகிறாயா?" என்று ஒரு குழந்தை கேட்டது. "ஐயோ! நானா! என் அப்பா கோபித்துக் கொள்வாரே?" என்று பாலு சொன்னான்.

உண்மையில், அப்பொழுது அப்பாவின் குரல் கணீரென்று கேட்டது. "அப்பொழுதே உடம்பு சரியாயில்லை; ராட்டினக் குதிரை வேண்டாமென்று சொன்னேனே, கேட்டானா?" என்று அப்பா சொல்லிக் கொண்டிருந்தார். பாலு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அப்பாவும் அம்மாவும் பக்கத்தில் நிற்பதும், தான் வீட்டில் படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பதும் அவனுக்குத் தெரிந்தது. ராட்டினக் குதிரை மேலிருந்து தான் மயக்கமுற்றுக் கீழே விழுந்து விட்டதை அவர்கள் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டான்.

இறக்கை முளைத்த குதிரையில் தான் சவாரி செய்ததெல்லாம் வெறும் சொப்பனம் என்று தெரிந்து கொண்டதும் பாலுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. "ஏலே பாலு! உடம்பு எப்படியிருக்கிறது?" என்று அப்பா அவன் முகத்தருகில் வந்து கேட்டார். அதுவும் சொப்பனந்தானோ என்று தெரிந்து கொள்வதற்காக, கையை நீட்டி அப்பாவின் முகத்தைத் தடவிப் பார்த்தான் பாலு!



மணி ஓட்டைச் சக்கரத்தை வைத்து விட்டு, ரிப்பேர் செய்து கொண்டிருப்பவரின் நல்ல சக்கரத்தைத் தட்டிக் கொண்டு போகிறான்!





# காலக்ஷேபம்

### கௌரவக் குறைவு

கோபு பல் வலியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தான்.

**தாயார்** :—அடே கோபு, டாக்டரிடத் தில் போய் பல்லைக் காண்பித்து விட்டு வாடா.

**கோபு** :—என்னம்மா, நம் யோக்யதை என்ன! டாக்டர் யோக்யதை என்ன! அவரிடத்தில் போய்ப் பல்லைக் காண்பிக் கச் சொல்கிறாயே. —**கே. நரசிம்மன்.**

*   *   *

### பதில் எப்படி ?

ஒருவர் ஒரு தினசரிக்குச் சந்தாதார ராக இருக்கும் தமது நண்பரைப் பார்த்து, "இன்றைய தினசரி இருக் குமா? இருந்தால்......"

"அதோ அந்தக் கடையில் இருக்கும். இல்லாவிட்டால் அந்தக் கார்ப்பொ ரேஷன் வாசக சாலையில் அவசியம் இருக்கும்." —**எம். ஆர். சரோஜா.**

*   *   *

### அன்பு

**கிட்டு** :—அடே சாமா! நாம் வெங் கிட்டுவின் கல்யாணத்துக்குப் போக வேண்டாமா?

**சாமா** :—சரித்தாண்டா! பாத்துக்கு வோம்.

**கிட்டு** :—ஏண்டா! நாளைக்கு எனக் குக் கல்யாணம் ஆனாலும் இப்படித் தானே இருப்பே?

**சாமா** :—சே! ஒனக்குக் கல்யாணம்னு கேள்விப்பட்டதும், எங்கே இருந்தா லும் அலறிப் புடைச்சிண்டு வந்து விழுந்துடுவேண்டா?

—**ஏ. சேதுராமன்.**

*   *   *

### எழுதுவதில்லை

**புத்தகம் வாங்க வந்தவர்** (கடைக் காரரிடம்) :—ஐயா, தங்களிடம் 'ஜவா ஹர்லால் நேருவின் கடிதங்கள்' இருக்கிறதா?

**கடைக்காரர்** :—எனக் கொன்றும் ஜவஹர்லால் நேரு கடிதம் எழுதுவ தில்லையே!

—**டி. டி. வெங்கட்ராமன்.**

### அவர் குட்டு வெளிப்பட்டது

**அவர்** :—ஏண்டா, நான் அடிக்கடி உன்னை எங்கேயோ பார்த்த ஞாபகமா யிருக்கிறதே! நீ எங்கேயாவது வேலை பார்க்கிறாயா, என்ன?

**அவன்** :—ஆமாங்க, நம்ப ஊர் கள்ளுக் கடையிலே இருக்கேன்.

—**டி. எஸ். எஸ். மணி.**

*   *   *

### ராஜப் பைத்தியம்

ஒரு கனவான் பைத்தியக்கார ஆஸ் பத்திரியைப் பார்வையிட்டார்.

**கனவான்** :—உன் பெயரென்ன?

**பைத்தியக்காரன்** :—தேவாஜி.

**கனவான்** :—நீ எங்கு வேலையி லிருந் தாய்?

**பைத்தியக்காரன்** :—நான் சிவாஜி மன்னனிடம் மந்திரியாக இருந்தேன்!

**அடுத்த அறையிலிருந்து ஒரு குரல்** :—ஏண்டா, பொய் சொல்லு கிறாய்? உன்னை நான் மந்திரியாக வைத்துக் கொள்ளவே இல்லையே.

—**கே. மகாதேவன்.**

*   *   *

### டாக்டர் உத்தரவு

**கோவிந்தன்** (பிச்சைக்காரனைப் பார்த்து) :— ஏண்டா! கொஞ்ச நாளாய்ப் பார்க்கிறேன், நீ எந்த வீட்டிற்கும் போகாமல் நம்ம வீட் டிற்கே வருகிறாயே! வேறு ஒருவர் வீட்டிற்கும் போகக் கூடாதோ?



**பிச்சைக்காரன்**:—டாக் டர் அப்படித்தான் உத் தரவு போட்டாருங்க.

**கோவிந்தன்** :—என் னடா அந்த உத்தரவு?

**பிச்சைக்காரன்**:—உடம்புக்கு ஒத்துக் கொள்கிற ஆகாரத்தைச் சாப்பிடச் சொன்னாருங்க.

—**எம். டி. ராதாகிருஷ்ணன்.**



# மலைமேல் சிறுவன்

உலகத்தில் சூரியனும் மழை பெய்கிறது; பயிர் செழிக்கிறது. காலச் சக்கரம் சுழலுகிறது. அது போலவே இந்தியாவும் நாள்தோறும் முன்னேறிக் கொண்டே இருக்கிறது. ஒரு சிறுவன் தன் இடுப்புத் துணியைக் காய வைக்கிறான். தெய்வீகமான பண்டைச் சுவர்கள் மீதும் மரங்கள் மீதும் சூரியன் படுகிறது. அருகிலுள்ள நகரங்களிலிருந்து [illegible] சப்தம் தூரத்தில் கேட்கிறது. இந்திய நாட்டின் மேல் அன்புடையவர்களுக்கு அது எவ்வளவு அழகாக காட்சி அளிக்கிறது?

நாட்டுப் புறங்களிலெல்லாம் இதே அமைதி காணப்படுகிறது. பல ஆயிரக்கணக்கான வருடங்களாக இதே அமைதியான வாழ்வு! நம் அலுவல்களை முன்னிட்டு நம்மில் பலர் நகரங்களில் வசித்து வருகிறோம் என்றாலும் நாம் அந்த அமைதியின் மத்தியிலிருந்துதான் வந்திருக்கிறோம்.

தம் குடும்பத்தோடும் நண்பர்களோடும் அமைதியாக வாழ்ந்து வந்த 40 கோடி சீனர்களின் வாழ்வை ஜப்பானியப் படைகள் அடியோடு குலைத்து விட்டன.

இந்தியாவில் இந்த நிலைமை ஏற்படக்கூடாது. இதற்கு நாம் எல்லோரும் ஒன்றுபட வேண்டும். நமக்காக போராடுகிறவர்களுக்கு உதவவேண்டும். நம் முழு பலத்தையும் கொண்டு நம்மைத் தாக்கவரும் எதிரியைத் தடுக்க வேண்டும்.

## நீங்களேயோசித்துப் பார்த்து ஒன்றுபட்டு உழையுங்கள்!

## அதுதான் தேசியப் போர்முனை

CPU.8-A.TM.

# புராண தகனம்

[ பி. ஸ்ரீ. ]

எந்தப் புராணத்தை யார் கொளுத்தினாலும், புராணலிங்கம் பிள்ளை உள்ளவரை பக்த ஜனங்களுக்கு என்ன கவலை? புஸ்தகங்களும் ஏடுகளுமாகிய புராணப் பிரதிகளெல்லாம் போய்விட்டால்தான் என்ன? புராணலிங்கம் இருந்தால் போதுமே; புதிய புராணங்களைப் படைத்து விடுவாரே! ஆம்; புதிய புதிய கதைகளும் பழைய கதைகளோடு பக்குவமாய்க் கலந்து காலத்துக்கு ஏற்ற கோலம் பூண்டு பெரிய பெரிய புராணங்களாகப் புறப்படும். தெய்வங்களுக்கு மகிமையும், ஆஸ்திகர்களுக்கு ஆறுதலும், நாஸ்திகர்களுக்கு ஆத்திரமும், ஹாஸ்யப் பிரியர்களுக்கு ஆனந்தமும் அதிகரிக்கும்படி வந்து குதித்து விடும் புதிய பெரிய புராணங்கள். அவ்வளவு மனோ பாவம், ஹாஸ்ய உணர்ச்சி இந்தப் புராணிகருக்கு.

சில சமயங்களில் இவர் பழிக்க வந்தவர்களையும்,—ஏன்? புராணங்களை எரிக்க வந்தவர்களையும் கூட,—சிரிக்க வைத்துவிடுவார். ஆம், ஆம்: அவர் சிரிக்கமட்டுமல்ல; தங்களைப் பார்த்துத் தாங்களே சிரித்துக் கொள்ளவும் விட்டு விடுவார்.

## நாட்டு நடப்பும் புராணப் போக்கும்

புராணிகரின் வாய் புராணம் சொல்லிக் கொண்டிருந்தாலும், பார்வை இந்த உலகத்திலே தான்; கருத்துக்கள் உயர உயரப் பறந்தாலும் கால் தரையிலேதான்! எனவே, ஒரு நாள் காலட்சேபம் தொடங்கும்போது பத்திரிகையும் கையுமாக வந்த ஒருவரைப் பார்த்துப் புராணலிங்கம், "என்ன விசேஷம், ஐயா!" என்று கேட்டார்.

அவர், படித்த பத்திரிகையை மடித்துக் கொண்டே, "ஸர்வம் யுத்த மயம் ஜகத்! ஆனால் நமது நாட்டிலே யுத்த முயற்சிகளுக்கும் மேலாகச் சில முயற்சிகள்! முஸ்லிம் லீக் 'பாக்கிஸ்தான், பாக்கிஸ்தான்' என்று ஜபம் செய்ய, இந்து மகா சபை 'இந்துஸ்தான், இந்துஸ்தான், அகண்ட இந்துஸ்தான்' என்று எதிர் மந்திரம் போட்டுக் கண்மூடி ஜபமணிகளை உருட்டிக் கொண்டிருக்கிறது. ஆளும் ஜாதியோ ஒரு சமயம் மகா சபையை உத்ஸாகப் படுத்தி மந்திரம் போடுகிறது; ஒரு சமயம் தந்திரமாக லீகைத் தட்டிக் கொடுக்கிறது; 'உங்களுக்குள்ளேதான் ஒற்றுமையில்லையே!' என்று பரிகசிக்கிறது; 'யுத்த சமயத்தில் சுதந்திரமா பெரிது? அந்த நினைவே கூடாது!' என்று பயமுறுத்துகிறது. இந்த நிலையில் சமரஸப் பேச்சோ செவிடன் காதில் ஊதிய சங்கு தான்! பாக்கிஸ்தானும் இந்துஸ்தானும் ஔரங்கசீபும் ஆருத்திரா தரிசனமும் போலே!—என்று சொல்லி விட்டுச் சிலர் சும்மா இருந்து சுகம் பெறப் பார்க்கிறார்கள். சரியான கிளர்ச்சிக்குத் தான் வழியில்லையே; தமிழர் முன்னேற்றம் இதுதான்!—என்று தமிழிலக்கியங்களையாவது கொளுத்தி வேடிக்கை காட்ட விரும்புகிறது சுயமரியாதைக் கட்சி. ஆனால் 'உணவுப் பஞ்சத்தோடு அறிவுப் பஞ்சமும் வந்து விடுமோ? மகாத்மாவின் உபவாசம்தான் எப்படி முடியுமோ?—என்றெல்லாம் நாடு பரிதவிக்கிறது" என்று நாட்டிலுள்ள விசேஷத்தைச் சுருக்கக் கூறி விளங்க வைத்தார்.

அப்படி அவர் சொல்லி முடித்ததும், புராண காலட்சேபம் நடைபெறும் அதே இடத்தில், அந்த ஆஸ்திகர்கள் கண் முன்பே, புராண தகனம் செய்ய வேணுமென்று வந்திருந்த சில சுயமரியாதைக் காரர்களுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது.

அதைக் கவனித்த புராணலிங்கம் பளிச்சென்று, "எல்லாம் பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதைதான்!" என்றார். உடனே சுயமரியாதைக்காரர்கள் 'கொல்' லென்று சிரித்துவிட்டார்கள். ஏனென்றால் புராணிகரின் இஷ்ட தெய்வம் பிள்ளையார்; பிள்ளையாரை ஸ்தோத்திரம் செய்தே புராணம் தொடங்குவார்: இப்போது அப்பேர்ப்பட்ட பக்தரே வாய் தவறிப் 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே'ன்று சொல்லித் தெய்வ நிந்தனை செய்து விட்டாரே!—என்று கை தட்டிக் கால் தட்டிக் கோஷம் செய்தார்கள்.

புராணிகரும் சிரித்துக்கொண்டே, "நான் நிந்தனை செய்யவில்லை; நீங்கள் சிந்தனை செய்து பார்க்கவேணுமென்று தான் ஒரு புராண கதையைக் குறிப்பிட்டேன்" என்றார். அப்போது ஒரு வைதிகர், "அப்படியும் ஒரு புராணமா? 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது!' என்பது ஒரு பழமொழிதானே?"

என்று கேட்டார். "பழமொழியானாலும் புதுமொழி யானாலும் ஏதாவது ஒரு உட்பொருள் வேண்டாமா?" என்று புராண லிங்கம் ஒரு எதிர்க் கேள்வி போட்டார்.

அதற்கு சுயமரியாதைப் பிரமுகர் ஒருவர், "பொருள் என்ன? தெரிந்ததுதானே: எவனோ 'பிள்ளையார்' பொம்மை ஒன்று பிடித்தான்; பார்த்தவர்கள் அதை ஏதோ ஒரு குரங்குப் பொம்மை யென்றே நினைத்து விட்டார்கள்; ஆனை - முகத்தை அவ்வளவு அழகான அனுமார் - முகமாய்ச் செய்து விட்டான், களிமண்ணால் பொம்மை செய்தவன்! அந்தப் பிரகஸ்பதி மூளையிலும் அவ்வளவு களிமண் இருந்திருக்க வேணும்! அந்த நிலையில் பிள்ளையார் குரங்காய்ச் சமைந்தது பிரமாதம்? என் மனைவி ஒரு பி. ஏ; நல்ல மூளை: எனினும் அவள் சமைத்தால், அடடா! ...... குழம்பு பன்னை ரஸமாய் முடிகிறதே!" என்று அந்த ரஸத்திலே ஈடுபட்டுப் புன்னகை புரிந்தார். சுயமரியாதைக்காரர்கள், புராண மரியாதைக்காரர்கள் எல்லாரும் ஒரு நிமிஷம் அந்த அந்த மரியாதைகளை மறந்து கை கொட்டி ஏக ஆரவாரம் செய்து விட்டார்கள்.

ஆரவாரம் ஓய்ந்ததும் புராணிகர் அலையடித்து ஓய்ந்த கடல் போலிருந்த அந்தச் சபையை நோக்கி, "நம்முடைய நண்பர் இப்போது சொன்னதெல்லாம் சொந்த அனுபவம்— சுய புராணம். இனிமேல் 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த' அந்தப் புராணத்தையும் சொல்லிவிடுகிறேன். அது ஒரு மகா புராணத்திலே, 'மகா கணபதி அனுமாராகக் காட்சி கொடுத்த மகா வைபவம்' என்று வருகிறது. கேளுங்கள் ஆஸ்திக நாஸ்திக சிகாமணிகளே!" என்ற பீடிகையோடு பேசத் தொடங்கினார்:

## சைவ வைஷ்ணவ மகா யுத்தம்

"கிழக்கு இந்தியக் கம்பெனியா ரென்றும், கும்பினியாரென்றும் பெயர் பெற்ற தொப்பிக்காரர்கள் கருணை கூர்ந்து தங்கள் சீமைச் சரக்குகளோடு சட்டத்தையும் சமாதானத்தையும், நல்லறிவையும் நாகரிகத்தையும் கப்பலேற்றி வந்து இறக்குமதி செய்தார்கள்ல்லவா நமது நாட்டிலே? அப்படி அவர்கள் தொப்பியும் பூட்ஸும் கருட்டுமாகக் கரையில் குதித்துச் சட்டத்தையும் சமாதானத்தையும் சட்டைப் பைக்குள் ளிருந்தும், மூளையைத் தொப்பிக்குள்ளிருந்தும், நாகரிகத்தை எரிந்து போன சுருட்டிலிருந்தும் வெளிப்படுத்திய பின், அந்த ஆனந்தத்திலே மெய்ம் மறந்து சுதந்திரத்தையும் மறந்து ஒற்றுமையையும் மறந்து போனார்கள் நமது மகாஜனங்கள். ஒரு சமயம் இவர்கள் வேறு யுத்தமில்லாததால் சைவ வைஷ்ணவ மகா யுத்தத்தையாவது நடத்திப் பார்க்கலாமென்று தீர்மானித்தார்கள். சிவன் கோவில், பெருமான் கோவில் என்ற இரண்டு கோவில்களுக்கும் இடையே இருந்த ஒரு குளம் எந்தக் கோவிலுக்குச் சொந்தம் என்பதுதான் யுத்த காரணம். குளமே யுத்த களம். வேதமானவை எத்தனையோ அமிழ்தினும் இனிய தமிழ் வார்த்தைகள், வேதாகம மகா வாக்கியங்கள்! எனினும் 'குளத்தின் ஒரு பகுதியை எங்களுக்குச் சொந்தமாக்கிவிட்டால், பாக்கியாக வுள்ள பெரும் பகுதியையும் உங்களுக்கே விட்டு விடுகிறோம்' என்று வைஷ்ணவ ஸமாஜம் சொல்லிக் கொண்டிருந்தது. சைவ மகா சபையோ, 'குளம் அகண்டமானது; அதைப் பிரிக்க முடியாது' என்று ஒரே பிடிவாதமா யிருந்தது. கடைசியாக அந்த அகண்டமான குளம் கும்பினி—சர்க்காருக்கே ஏகபோகமாகி விட்டது."

இப்படிப் புராணம் சொல்லும்போது, "அந்த நாளிலும் பாகிஸ்தான் விவகாரமா?" என்று கேட்டார் ஒருவர். வேறொருவர், "இந்தக் கதைக்கும், 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த' கதைக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டார்.

புராணிகர் சொன்னார்: "சற்றுப் பொறுமையுடன் கேளுங்கள்; அதைத் தானே சொல்லப் போகிறேன். அப்போது சைவரான தாசில்தார் ஒருவர் கலெக்டரிடம் போய், 'தர்ம துரையே! குளக் கரையில் சில இடங்களைத் தோண்டிப் பார்ப்போம். சைவ அடையாளமாகவோ, வைஷ்ணவ அடையாளமாகவோ ஏதாவது புதை பொருள் கிடைக்குமானால், இந்த விவகாரம் எவ்வளவு லேசாகத் தீர்ந்து விடும்!' என்றார். அன்றிரவே அவர் இரகசியமாகத் தம்முடைய வேலைக்காரனோடு போய் ஒரு பெரிய பிள்ளையார் - விக்கிரகத்தை உருட்டி வந்து குறிப்பிட்ட ஓரிடத்தில் புதைத்து வைத்தார். ஆனால் அவர் ஒன்று நினைக்கப் பிள்ளையார் ஒன்று நினைத்து விட்டார்! குறித்த இடத்திலே கலெக்டர் வந்து தோண்டிப் பார்த்ததில் — ஐயோ! பிள்ளையாரைக் காணவில்லை; அனுமார் திவ்யமாக சேவை ஸாதித்தார்!"

"அது எப்படி?" என்று ஒரு சைவர் பெருமூச்சு விட, வைஷ்ணவர்கள் ஆனந்தக் கண்ணீர் விட்டார்கள். நமது புராணிகரோ

“ அதற்குள் ஆத்திரமா? இதோ வெளியிடு கிறேன் அந்த ரகஸ்யத்தையும். அந்தத் தாசில் தாரின் வேலைக்காரன் ஒரு வைஷ்ணவன். பிள்ளையாரைப் புதைத்த பின் அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அவன் தன் மனைவியோடு போய் அந்தப் பிள்ளையாரைக் குளத்திற்கு வெகு தூரத்திலுள்ள ஒரு மரத்தடியில் பிரதிஷ்டை செய்து விட்டுத்தான் ஆறுதல் அடைந்தான். அப்படிச் செய்தும் உறக்கம் பிடியாததால், அதே இடத்தில் ஒரு அனுமாரைப் புதைத்துவிட்டான். அங்கே பிள்ளையாரை எதிர்பார்த்துத் தடிதூக்கிக் கொண்டிருந்த தாசில்தாருக்கு அனுமார் தரிசனம் அளித்ததும், ‘பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே!’ என்று அவர் ஏங்கிப் போனார்” என்றார்.

“அப்படியானால் குளம் வைஷ்ணவர்களுக்கல்லவா சொந்தமாக வேணும்? கும்பினியாருக்குச் சொந்தமாகிவிட்டதென்றீர்களே!” என்று ஒரு வைஷ்ணவர் ஆத்திரப்பட, புராணலிங்கம் பதில் சொன்னார் அமைதியாக: “அனுமாரைக் கண்டதும் ‘எங்கள் தெய்வம், எங்கள் தெய்வம்’ என்று வாதாடி வழக்குரைத்தார்கள் மாத்வர்கள். சைவர்களோ, ‘இதுவும் மகா கணபதியின் திருவிளையாடல்; எங்கள் பாத்தியதை போய்விடவில்லை; அவரே இப்படிக் காட்சி தருகிறார்!’ என்று சட்டமும் சாஸ்திரமும் காட்டினார்கள். கலெக்டர் துரை ஒரு சமயம் வைஷ்ணவர்களையும், ஒரு சமயம் சைவர்களையும், ஒருசமயம் மாத்வர்களையும் தட்டிக் கொடுத்தும், பயமுறுத்தியும், ‘நீங்கள் ஒத்துப்போகும்வரை நாங்களே தர்மகர்த்தர்கள்; குளம் கும்பினியார் வசம்’ என்று தீர்ப்பளித்தார்.”

### கதை முடிந்தது; கற்பனை பலித்தது!

“அந்தக் கட்சிக்காரர்களை யாரும் சமாதானப் படுத்தவில்லையா?” என்று ஒருவர் குறுக்கிடப் புராணிகர், “ஆம்; துணிந்து சமரஸம் பேசினார் ஒருவர். ஆனால் ‘கோவிந்தா! கோவிந்தா!’ என்றும், ‘ஹர ஹர மகாதேவா!’ என்றும் ‘அனுமாருக்கு ஜே!’ என்றும் அவர்கள் உரக்க ஜபம் செய்துகொண்டிருந்ததால், சமரஸப் பேச்சு அந்தத் திருச் செவிகளில் ஏறவில்லை. ‘சமரஸமா? அது என்ன? மிளகையும் உப்பையும் புளியையும் தண்ணீரையும் சம எடை போட்டுக் கொதிக்க வைப்பதுதானே சமரஸம்!’ என்று பரிகசித்தார்கள்” என்றார்.

பிறகு சுயமரியாதைக்காரர் ஒருவர், “கதை முடிந்ததா? கற்பனை பலித்ததா?” என்று

கேட்கப் புராணிகர், "சற்றுப் பொறுக்க வேணும். அந்த நிலையில் வேறொன்றும் செய்வதற்கில்லையே!—என்று சிவர் இரண்டு கோவில்களின் 'ரிகார்டு'களையும் சேர்த்துச் சொக்கப்பனை கொளுத்தப் பார்த்தார்கள். கதை முடிந்தது; ஆனால் அது பலிக்கவில்லை!" என்று கதையை முடித்தார்.

அப்பால் சரித்திரக்காரர் ஒருவர், "ஏதோ ஒரு மகா புராணத்தில் இந்தக் கதை இருப்பதாகச் சொன்னீர்களே: கும்பினியார் காலமும் தற்காலமும் எப்படிப் பழைய புராணத்தில் இருக்க முடியும்?" என்று அவ நம்பிக்கையுடன் கேட்டார். உடனே புராண்லிங்கம், "அதுவா? நல்ல வேளை; ஞாபகப் படுத்தினீர்: 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த இந்தப் பெருங்கதை—இந்த மகா வைபவம் ஹாஸ்ய மகாபுராணத்திலே, வருங்காலம் உரைத்த காண்டத்திலே, பழமொழியும் புது மொழியும் (ஒரு தலைபோன விவகாரம்) என்ற படலத்திலே ஸாக்ஷாத் மகா கணபதியே கட்டளை யிட, ஸாக்ஷாத் சந்திதேவர் கனைத்தருள, ஸாக்ஷாத் அனுமந்த தேவரும் அடியேனும் ஒருங்கே கேட்டருளியது!" என்றார்.

சபை யெங்கும் ஒரே சிரிப்பு. அந்த ஒரே சிரிப்பில் ஒன்றுபட்டார்கள் சுயமரியாதைக் காரர்களும் புராணக்காரர்களும்.

அப்போது அங்கே இருவர் மட்டும் சிரிக்கவில்லை. விசாரித்துப் பார்த்ததில் அவர்களில் ஒருவர் ஆராய்ச்சிக்காரர் என்பதும், தமிழர் சரித ஆராய்ச்சியில் 'தலைமைப் புலமை நடாத்தி வருபவர்' என்றும் தெரிய வந்தது. அவருடைய நீண்டு தொங்கிய முகம், "இதெல்லாம் மெய்யோ, பொய்யோ? ஐயோ!" என்ற ஆராய்ச்சியிலே ஆழ்ந்திருந்தது.

கடைசியாக ஒரு ரஸிகரான சுயமரியாதைக் காரர் சிரித்துக்கொண்டே அவரை முதுகில் தட்டிக் கொடுத்து, "அண்ணே! பொய்யானால் என்ன? நாம் சொல்லும் பொய்கள் இவ்வளவு ரஸமாகக் கூட இல்லையே!" என்றார். அது கேட்டதும் அந்த ஆராய்ச்சிக்காரருக்கும் சிரிப்பு வந்துவிட்டது.

அந்தச் சிரிப்பிலே அகப்பட்டு மெய்ம்மறந்து போனவர்கள் புராண தகனத்தையும் மறந்து போனார்கள்.

நமது புராணிகர் மட்டும் காலநிலையை எண்ணி எண்ணிக் கண்ணீரும் கம்பலையுமாய்ப் பிள்ளையாரை ஸ்தோத்திரம் செய்து கொண்டிருந்தார்.





## சின்னப்பா — ராஜகுமாரி

காயகல்பம், காயகல்பம் என்று பெரியவர்கள் சொல்வதைக் கேட்டு நமக்கு அதில் நம்பிக்கை பிறக்காவிட்டால் பெரிய பெரிய மனிதர்கள் காயகல்ப சிகித்சை பெற்று வாலிபர்கள் ஆவதைப் பார்த்தாவது நமக்கு அதில் நம்பிக்கை பிறந்திருக்க வேண்டும்! அப்படியும் நம்பிக்கை பிறக்காதவர்கள் ஜுபிடர் பிக்சர்ஸார் தயாரிக்கும் 'குபேர — குசேலா' என்ற படத்தைப் பார்த்து விடுவது நல்லது! தள்ளாத 'குடுகுடு' கிழவரான குசேலர் கண்ணன் அருளால் குபேரரானதும், அவருக்குக் காயகல்ப சிகித்சை செய்துகொள்ள வேண்டுமென்று ஆசை உண்டாகிறது! அவர் காயகல்பம் சாப்பிடப் போய், ஓடுகிற பாம்பை மிதிக்கும் வாலிபனாக மாறுகிறார். இந்த வாலிபர் எதிரில் எந்தப் பாம்பும் ஓடாமல் போகவே, அதை மிதிக்கும் சந்தர்ப்பமும் அவருக்குக் கிடைக்காமல் போகிறது! ஆகவே, அவர் பாம்புகள் வாழும் நாக லோகத்திற்குச் செல்வதென்று தீர்மானிக்கிறார். அங்கு போய்க்கூட குபேர குசேலரின் பழைய துரதிருஷ்டம் அவரை விடுவதாக இல்லை! இவர் பாம்பை மிதிப்பதற்குப் பதிலாக ஒரு நாகம் இவரைக் கவனித்து விடுகிறது! அதாவது, நாக லோகத்து ராஜகுமாரி குபேர குசேலரைத் தன் கடைக்கண்ணால் பார்த்து விடுகிறாள்! இந்த சோதனையில் குசேலர் எப்படி மீண்டாலும் சரி, ''காயகல்பத்தின் மகிமையே மகிமை!'' என்று நாம் வியக்க வேண்டியதுதானே?



# படித்துப் பார்!

## ஆண்டாள்

[ ஆசிரியர் : பி. ஸ்ரீ. ஆச்சாரியார் ; பிரசுரம் : அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை. விலை : ரூ. 1.]

வேதாரயமி வந்தாள்; வேள்விரயமி வந்தாள்!
கோதைாரயமி வந்தாள்; கோவலாரயமி வந்தாள்!
போதாரயமி வந்தாள் ; பூமிரயமி வந்தாள் !
சாதாரயமி வந்தாள் ; ஞானாரயமி வந்தாள் !

இதோ இந்த அழகிய புத்தக வடிவத்தில் 'சூடிக் கொடுத்த சுடர்க் கொடி' விஜயம் செய்திருக்கிறுள்.

பெரியாழ்வார் நந்தவனத்திலே கண்டெடுத்த தெய்வ மலர் ஆண்டாள். கண்ணனிடம் காதல் கொண்டு மானிடரை மணக்க மாட்டேன் என்றவள் ஆண்டாள். பகவானுக்கு வைத்திருந்த பூமாலையைத் தான் அணிந்து அழகு பார்த்துக் கொடுத்தவள் ஆண்டாள். திருப்பாவை என்னும் அற்புதத் தமிழ்க் கவிதையைப் பாடியவள் ஆண்டாள். வாரணம் ஆயிரம் சூழ நாரணன் நம்பி வந்து தன்னைக் கைத்தலம் பிடித்து மணந்ததாகக் கனுக் கண்டு பாடியவள் ஆண்டாள்.

அவளுடைய அற்புத சரித்திரத்தை பி. ஸ்ரீ. ஆச்சாரியார் தமக்கே சொந்தமாக உரிய இன்பத் தமிழ்நடையில் எழுதியிருக்கிறுர்.

ஆண்டாளைப் பற்றித் தெரிந்துகொள்ளாதவர்களும், அவளுடைய தெய்விகத் திந்தமிழ்ப் பாடல்களைப் படியாதவர்களும் தமிழ்நாட்டில் இருப்பதற்கே நியாயமில்லை.

## சிசு பாலனம்

[ ஆசிரியர் : ராஜாஜி ; பிரசுரம் : அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர் ; விலை : 0—8—0.]

"கல்கி"யில் பிரசுரமான ராஜாஜியின் சிசு பாலனக் கட்டுரைகளும், தெருவுக்கு ஒரு பிருந்தாவனம் என்னும் கட்டுரையும் பெரிய எழுத்தில் உயர்ந்த பதிப்பாக வெளியிடப் பட்டிருக்கின்றன.

குழந்தைகளைப் பெற்ற தாய் தகப்பன்மார்கள் நூறு தடவை படிக்க வேண்டிய புத்தகம்.

## கடல் கடந்த காந்தி

[ ஆசிரியர் : கனச்யாமதாஸ் பிர்லா ; மொழிபெயர்ப்பு : அ. சுப்பையா ; பிரசுரம் : லலிதா அண்டு கம்பெனி, விநாயகபுரம், தென்னூர், திருச்சினுப்பள்ளி ; விலை : ரூ. 1-4-0]

இதிகாச புராணங்களில் சில சம்பவங்களைப் படிக்கும்போது நாமும் அப்பொழுது உடனிருந்து அநுபவிக்காமற் போனேமே என்ற உணர்ச்சி தோன்றுவதுண்டு. அவ்விதமே, லண்டன் வட்ட மேஜை மகாநாட்டுக்கு மகாத்மா சென்ற சமயம் நாமும் அவருடன் சென்று பிரயாணத்தை அனுபவிக்க வில்லையே என்று அநேகருக்குத் தோன்றியிருக்கும். அந்தக் கவலையை இந்நூல் மாற்றி விடுகிறது. லண்டனுக்கு மகாத்மாவுடன் சென்றிருந்த ஸ்ரீ ஜி. டி. பிர்லா எழுதிய இந்த தினக் குறிப்பு நூலைப் படிக்கத் தொடங்கும் பொழுதே நாமும் கடல் கடந்து செல்ல ஆரம்பித்து விடுகிறோம். "கல்கி"யில் இந்நூல் தொடர்ச்சியாக வெளி வந்த காலத்தில், நூலின் விஷயமும் ஸ்ரீ சுப்பையாவின் சரளமான மொழிபெயர்ப்பும் ரொம்பவும் பாராட்டப் பட்டன. புத்தக வடிவில் எப்போது வெளியாகும் என்று அநேகர் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய ஆவலைப் பூர்த்தி செய்ய இதோ அழகான ரூபத்தில் புத்தகம் வெளியாகியிருக்கிறது.

---

## கழுதை சவாரி!



கணவன் :—என் குழந்தையை இப்படி அழ விடுகிறுய்?

மனைவி :-நானு அழ விடுகிறேன்? அவனுக்குக் கழுதை சவாரி செய்யணுமாம். நீங்கள்தான் அவனை வெளியே எடுத்துக்கொண்டுபோங்கள்!

டிரிபோலி வீழ்ந்ததும்

இத்தாலிய சாம்

ராஜ்யமும் வீழ்ந்தது

# வெற்றியின் மூலம் சுதந்திரம் கிட்டும்

நேசதேச வெற்றி நிச்சயம்

அதை துரிதப்படுத்துவதில்

நீங்களும் பங்கெடுத்துக்

கொள்ளுங்கள்



C. P. U.—150 TM.

# என் அத்தை

[ ஜானகி ]

அம்பிகைக்காகத் தொடுத்த புஷ்பத்தைப் பற்றி இழுத்துப் பிய்த்தால், யாருக்குத்தான் கோபம் வராது? என்னை மறந்து சுளீரென்று ராஜுவின் கன்னத்தில் அறைந்தேன். ராஜு, "வீல்" என்று கத்தினன், "ஹேமா! என்ன காரியம் செய்தாய்?" என்ற என் அத்தையின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்தேன். அத்தையின் அன்புகனிந்த பார்வை, என்னைத் தழ தழக்கச் செய்தது. தன் பேரனை வாரி அணைத்த வண்ணம், உள்ளே சென்ருள் அத்தை. வேறு யாராவது ராஜுவை அடித்திருந்தால், அவர்கள் அத்தையின் கோபத்திலிருந்து தப்பியிருக்கவே முடியாது. என்னிடத்தில் அத்தை வைத்திருக்கும் அளவற்ற அன்பினுல் ஒன்றும் சொல்லாமல் சென்று விட்டார்! இன்று நான் என் மாமியாரான அத்தை, அத்திம்பேர், அத்தான் (என் கணவர்) இவர்களின் அன்புக்களஞ்சியமாக விளங்குகின்றேன். ஆனுல், சுமார் நான்கு வருடங்களுக்கு முன் நான் இருந்த நிலையையும், இப்பொழுது நான் இருக்கும் மஹோன்னத நிலையையும் எண்ணிப் பார்த்தால் — ஆஹா! என்ன விசித்திரம்!

எனக்கு வயது பதிநான்கு. வெண்ணுற்றில் வெள்ளம் இருகரையும் ஒழித்துக் கொண்டு ஓடிற்று. கால்களைத் தண்ணீரில் தொங்கவிட்ட வண்ணம் படித்துறையில் உட்கார்ந்தேன். தைமாதக் குளிரில் என் உடம்பு நடுங்கிற்று. இந்த அதிகாலையில் என் போன்ற பெண்கள் படுக்கையினின்றே எழுந்திருக்கமாட்டார்கள். ஏன்? மைதிலி மட்டும் எழுந்து விட்டாளா? ஆனுல் அவளுக்கு அப்பாவும், அம்மாவும் இருக்கிருர்கள். எனக்கு யார் இருக்கிருர்கள்? நான் ஒரு அநாதைதானே! என் எட்டாவது வயதில் தாய் விஷ ஜுரத்தால் இறந்தாள். மறு வருடமே தந்தையும் தாயைப் பின் தொடர்ந்தார். என் பாட்டியுடன், எங்கள் சொந்தக் கிராமமான வெண்ணுற்றங் கரையில், என் பெரியப்பாவின் இல்லம் வந்து சேர்ந்தேன்.

அன்று முதலே நான் அவ்வீட்டின் வேலைக்காரிபோலவே கருதப்பட்டேன்: மைதிலி பெரியப்பாவின் பெண்; ராமுவும், கிட்டுவும் அவள் தம்பிகள். இம் மூவரும் பெரியப்பாவின் செல்லக் குழந்தைகள். எனக்கும் அப்பா இருந்தால் நானும் ஒரு செல்லக் குழந்தையாக இருக்க மாட்டேனு?

ஆறு மணிச் சங்கின் ஒலி, என்னைத் திடுக்கிடச் செய்தது. ஐயோ! பெரியம்மா கோபித்துக் கொள்வாளே, என்ற பயத்தில் குளிரையும் மறந்து, ஜலத்தில் இறங்கிக் குளித்தேன். குடத்தில் ஜலமெடுத்துக் கொண்டு வீட்டை அடைந்தேன். உள்ளே நுழையும்போதே மனம் திக், திக் என்று அடித்துக் கொண்டது. மெள்ளக் குடத்தை மேடையில் இறக்கினேன். "என்னடி! ஹேமா! யாருடன் இத்தனை நாழி வம்பளந்தே?" என்ற பெரியம்மாவின் கோபக் குரல், என்னை நடுங்கச் செய்தது. "இல்லை, பெரியம்மா! ரொம்பக் கூட்டமாயிருந்தது?" என்று சமாதானம் சொல்ல ஆரம்பித்தேன்......... "சரிதான், போய்ச் சீக்கிரம் பாத்திரங்களை, அலம்பி வைத்து விட்டுச் சுறு சுறுப்பாக வேலைகளைப் பார், உம்!" என்று உத்தரவு பிறந்தது!

சமையல் தவிர மற்ற சுற்றுக் காரியங்கள் எல்லாம் என்னைச் சேர்ந்தவை. என் பெரியப்பா, அநேகமாக வீட்டிலேயே இருக்கமாட்டார். மிராசுதார் ஆனதால், அடிக்கடி வயல்களுக்கும் குடியானவன் வீடுகளுக்கும் சென்று விடுவார். மத்தியானம் அவர் வருவதற்குள், நான் பூஜா பாத்திரமெல்லாம் தேய்த்துத் தயாராய் வைத்திருக்க வேண்டும். அவர் சாப்பாடு முடிந்து வெற்றிலைப் பெட்டியுடன், திண்ணையில் உட்கார்ந்து, மைதிலி, ராமு, கிட்டு இவர்களைக் கூப்பிட்டுக் கொஞ்சுவார். கடைசியாக என்னைக் கூப்பிட்டு, "ஹேமா! நீ, நல்ல பெண்; சமையல் செய்ய நன்ருகக் கற்றுக் கொள்; சீக்கிரமே நல்ல பையனுகப் பார்த்து உன் கலியாணத்தை நடத்திவிடுகிறேன்" என்று சொல்லி என் முதுகில் தட்டிக் கொடுப்பார். அப்புறம் சீட்டுக் கச்சேரிக்குச் சென்ருரானுல், இரவு தான் வருவார்.

எனக்கு ஒழிந்த வேளைகளில், பாட்டியின் பக்கத்தில் போய் உட்கார்ந்து

கொள்வேன். பாட்டி நல்ல கதைகள் சொல்வாள். இடையிடையே தன் இறந்துபோன பிள்ளையையும், நாட்டுப் பெண்ணையும் நினைத்துக் கண்ணீர் விடுவாள். தன் ஒரே பெண்ணான பவானியைப் பற்றியும், அடிக்கடி சொல்வது வழக்கம். என் அத்தை பவானிக்கு எட்டு வயதான பிறகே, என் அப்பா பிறந்தாராம். அதனால் அப்பாவிடம் அத்தைக்கு உயிராம். அந்தத் தம்பியைப் பறி கொடுத்த பின், அத்தை பவானி தஞ்சைப் பக்கமே வருவதில்லையாம். அத்தையின் கணவர் பம்பாயில் போஸ்டல் சூப்பரண்டெண்டாக இருக்கிறாராம். அத்தையின் ஒரே புதல்வரான சுந்தரேசன் சென்ற வருஷம் பி. ஏ. பரீட்சையில் ராஜதானியிலேயே முதலாவதாகத் தேறி யிருப்பதாகச் சொன்னார்கள்.

ஒரு நாள் "அம்மா! அம்மா!! உன் பேரன் சுந்தரேசன் வருகிறான். மாப்பிள்ளைக்கு உடம்பு சரியில்லாததால், அவர் வர முடியவில்லையாம்" என்று சொல்லிக் கொண்டே, பெரியப்பா கையில் கடிதத்துடன் பாட்டியிடம் வந்தார். "என்ன, பவானி பிள்ளையா வரப் போகிறான்?" என்று கேட்டுக் கொண்டே, தட்டுத் தடுமாறிக்கொண்டு எழுந்து வந்தாள் பாட்டி. "ஆம் அம்மா! இன்று மாலை வண்டியில் வருகிறான். அடியே பர்வதம்! நல்லதாக டிபன் பண்ணி வை! நான் வண்டியைக் கட்டிக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போகிறேன். மைதிலி! சீக்கிரம் தலை பின்னி நெற்றிக்கு இட்டுக் கொள்; அடே ராமு! கிட்டு! தலை வாரிக் கொண்டு வேறு சட்டை போட்டுக் கொள்ளுங்கள்" என்று உத்தரவு போட்டு விட்டு வெளியே போய்விட்டார் பெரியப்பா. பெரியம்மா தடபுடலாக டிபன் பண்ண ஆரம்பித்து விட்டாள். "அடி ஹேமா! சீக்கிரம் மங்களத்திடம் போய் ரவை யிருந்தால் ஒரு படி அளந்து வாங்கிக்கொண்டு வா; சீக்கிரம் போ; அவளிடம் இல்லாவிட்டால், எதுத்தாத்து, எச்சுமி மாமியைக் கேட்டு வாங்கி வா" என்று டிபன் செய்வதற்குள், என்னை ஆட்டி வைத்து விட்டாள். இத்தனை தொந்தரவிலும் வரப் போகும் அத்தான் எப்படியிருப்பார், அவர் என்னுடன் பேசுவாரோ மாட்டாரோ என்பதைப் பற்றி என் மனம் யோசனை செய்துகொண்டிருந்தது.

மணியும் ஐந்தடித்தது. மைதிலி புதுச் சிற்றாடையுடன், தன்னை ஒரு கலியாணப் பெண்போல் சிங்காரித்துக் கொண்டு, தெருத் திண்ணையில் உட்கார்ந்து, அத்தானை வரவேற்கத் தயாராயிருந்தாள். தூரத்தில் மாட்டுச் சலங்கையின் ஒலியும், "அம்மா! வண்டி வந்து விட்டது" என்ற மைதிலியின் குரலும் கேட்டது. அடுத்த நிமிஷம் மாட்டைத் தட்டிக் கொடுக்கும் சப்தத்துடன் வண்டியும் வந்து நின்றது. காமரா ஜன்னல் வழியாக வெளிப்புறம் நோக்கினேன்.

அத்தான் வண்டியிலிருந்து இறங்கினார். கம்பீரமான அவர் தோற்றம், என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. வண்டியிலிருந்து இறங்கி உள்ளே வந்தவர், பாட்டியை நமஸ்கரித்தார். பாட்டி பேரனைப் பக்கத்தில் உட்காரச்சொல்லித் தன் பெண் பவானியின் சௌக்கியத்தை விசாரித்தாள். டிபன் சாப்பிட்டவுடன், பெரியப்பா, அத்தானை மாடிக்கு அழைத்துச் சென்றார்; மைதிலியும், அவள் தம்பிகளும் கூடவே சென்றார்கள். அத்தான் எல்லாரோடும் கல கலவென்று பேசிக் கொண்டிருந்தார். அவர் பேச்சும், சிரிப்பும் கணீரென்று வீடு முற்றும் ஒலித்தது. என் மனதில் சொல்ல இயலாத ஏக்கம் குடிகொண்டது. மைதிலிக்குள்ள சுதந்திரம், எனக்குமட்டும் கிடையாதா? நானும் அவளைப் போல அத்தானுடன் பேச உரிமை இல்லையா? இக் கேள்வியை ஆயிரம் முறை என்னையே கேட்டுக் கொண்டேன்.

மறு நாள் அத்தானுக்காக விருந்து நடந்தது. நான் வடைப் பருப்பை அரைத்து எடுப்பதற்குள்ளாக மைதிலி, அத்தானுக்கு வெந்நீர் போடும்படி என்னை அவசரப் படுத்தினாள். கிட்டுவும் ராமுவும் குளித்ததில் அடுப்பு முற்றும் நனைந்து போய்விட்டது. நான் எவ்வளவு ஊதியும் எரியவில்லை. ஊதி, ஊதி வாய்தான் வலித்தது. கண்கள் புகையால் எரிச்சல் எடுத்தது. அப்பொழுது "ஹேமா! யாருக்கு வெந்நீர் போடப் போகிறாய்?" என்ற ஒரு குரல் கேட்டு நிமிர்ந்தேன். எனக்கு வெகு சமீபத்தில் அத்தான் நின்றிருந்தார்.

"அடடா! கண்ணெல்லாம் சிவந்து விட்டதே, ஹேமா! எனக்காகவா வெந்நீர்? வேண்டாம். நான் பச்சை ஜலத்தில்தான் குளிக்கப் போகிறேன்" என்றார். அவர் குரலில் அன்பு ததும்பிற்று.

"இதோ ஐந்து நிமிஷத்தில் போட்டு விடுகிறேன்" என்றேன், மெள்ள தைரியத்தை வரவழைத்துக்கொண்டு.

"வேண்டாம். நான் எப்பொழுதுமே பச்சை ஜலத்தில்தான் குளிப்பேன். நீ ஏன் சிரமப்படுகிறாய், ஹேமா! நீ ......" என்று ஏதோ சொல்ல வந்தவர், அப்பொழுது அங்கே வந்த மைதிலியைப் பார்த்ததும் சட்டென நிறுத்திவிட்டார். மைதிலி பெரியம்மா கூப்பிடுவதாகச் சொல்லவே, உள்ளே சென்றுவிட்டேன்.

அத்தான் வந்து ஒரு வாரமாகி விட்டது. அன்று தை வெள்ளிக்கிழமை. மாலையில் ஆனந்தவல்லி அம்மனுக்கும், ஸ்ரீ தஞ்சநாயகிக்கும் அந்தந்தக் கோவில்களில் ஊஞ்சல் வெகு விசேஷமாக நடைபெறும். இரவு சமையலுக்கு வேண்டிய காய்களை நறுக்கி ஸாம்பாருக்கு வெங்காயத்தை உரித்து வைக்கும்படி சொல்லிவிட்டு, பெரியம்மா மைதிலியையும், குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போய்விட்டாள். என் நினைவு முற்றும் கோவிலிலேயே இருந்தது. விதியை நொந்து கொண்டு, வெங்காயத்தை உரிக்க உட்கார்ந்தேன். "ஹேமா! நீ கோவிலுக்குப் போகவில்லையா?" என்று கேட்டுக் கொண்டே வந்த அத்தான், என் பக்கத்தில் உட்கார்ந்து, வெங்காயத்தை அவரும் உரிக்கத் தொடங்கினார்! நான் வெட்கத்தால் தலை நிமிரவில்லை.

"ஹேமா! நீ பம்பாய்க்கு வருகிறாயா? உன் அத்தை உன்னைப் பார்த்தால் எவ்வளவு சந்தோஷப் படுவாள் தெரியுமா?" என்றார். அவர் அன்பு என் வெட்கத்தைப் போக்கிவிட்டது. மெள்ளத் தலை நிமிர்ந்து, ஆவலோடு அவர் முகத்தை நோக்கினேன். கம்பீரமும் அழகும் பொருந்திய அவர் முகம் சித்திரம் போல் என் மனதில் பதிய, அதிக நேரம் பிடிக்கவில்லை; மௌனமாகத் தலை கவிழ்ந்தேன்.

"என்ன ஹேமா? என்னோடு பேச மாட்டாயா?" என்றார் மீண்டும்.

"பெரியப்பா அனுப்ப மாட்டார்" என்று கூறும்போதே, துக்கத்தால் என் குரல் கம்மியது.

"அவர் அனுப்பினால் வருவாயா? நானே அவரைக் கேட்கிறேன். அத்தை உன்னிடம் ரொம்பப் பிரியமாய் இருப்பாள். எங்கே, நிமிர்ந்து 'வருகிறேன்' என்று சொல் பார்க்கலாம்" என்றார்.

அவர் அன்பு என் துக்கத்தை அதிகமாக்கிற்று; கண்களைக் கண்ணீர் மறைத்தது; மெள்ள நிமிர்ந்து, "வருகிறேன். அத்தையைப் பார்க்க எவ்வளவோ ஆவலாக இருக்கு" என்றேன். அத்தான் கண்களிலும் நீர் நிறைந்தது.

"ஹேமா! சீக்கிரமே உன் அத்தையைப் பார்க்கலாம்" என்று கூறிய வண்ணம், என் நெற்றியில் புரண்ட மயிரைத் தள்ளி விட்டார். ராமுவின் கந்தல் சப்தம் என் பெரியம்மாவின் வருகையைத் தெரிவித்தது. அத்தான் எழுந்து மாடிக்குப் போய்விட்டார்.

மறு தினமே, அத்தான் பம்பாய்க்குப் புறப்படும் தினம். அன்று என் நினைவு முற்றும், அத்தானிடமே இருந்தது. அவர் எப்பொழுது பெரியப்பாவைக் கேட்பார்; பெரியப்பா, என்ன பதில் சொல்வார் என்பதைத் தெரிந்து கொள்ள ஆவலுடன் காத்திருந்தேன். பெரியப்பாவும், அத்தானும் பேசும் போதெல்லாம் உற்றுக் கவனிப்பேன். அத்தான் புறப்படும் நேரமும் நெருங்கியது. பாட்டியை நமஸ்கரித்து விடைபெற்றார். பெரியம்மா, மைதிலி, ராமு, கிட்டு, பெரியப்பா எல்லாரிடமும் சொல்லிக்கொண்டே, வண்டியில் ஏறிக்



"...... நீ ஏன் சிரமப்படுகிறாய், ஹேமா? ......"

கொண்டார். வண்டியும் சென்று மறைந்தது.

நான் ஏமாற்றத்தால் ஸ்தம்பித்து நின்றேன். அத்தான் நேற்று மாலை கூறியதெல்லாம் வெறும் விளையாட்டா? சே, இருக்காது. அப்படியானால், அவர் ஏன் பெரியப்பாவிடம் ஒன்றுமே கேட்கவில்லை? அத்தான் என்னை முற்றிலும் ஏமாற்றி விட்டார். என் மனம் பலவிதமாக யோசனை செய்தது. என்னைத் தன்னோடு அழைத்துச் செல்ல வெட்கமாய் இருந்ததோ? நான் அவ்வளவு கோரமாகவா இருக்கிறேன்?

என் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டேன். நான் நல்ல அழகியல்ல; ஆயினும் குரூபியுமில்லை. என் சிவப்பைக் கண்டு மைதிலியே, பொறாமைப் படுவாள்; அவளை விட நான் அழகிதான். கண்ணாடியில் என் முகத்தைப் பார்க்க, எனக்கே பரிதாபமாய் இருந்தது. "ஐயோ! ஹேமலதா!! நீ நன்றாக ஏமாற்றப்பட்டாய்" என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன். "சீ, மனமே, இனி அத்தானை மறந்து விடு" என்று என் மனதை வற்புறுத்தினேன். நான் எவ்வளவுக் கெவ்வளவு அத்தானை மறக்க விரும்பினேனோ அவ்வளவுக் கவ்வளவு, அவருடைய அன்பு கனிந்த முகம் என் மனத் திரையில் தோன்றித் தோன்றி, என் மனதை வருத்தியது. கண்ணீர் மல்கும் கண்களுடன் என் வேலைகளை யெல்லாம், செய்து முடித்து விட்டுக் கோவிலுக்குச் சென்றேன். அன்று அம்பிகையின் தரிசனம் கூட, என் மனதிற்குச் சாந்தி அளிக்கவில்லை.

நாட்கள் ஓடிக் கொண்டே இருந்தன. அன்று சாயங்காலம் "பர்வதம்! பர்வதம்!!" என்ற பெரியப்பாவின் உற்சாகமான குரலைக் கேட்டு, நிமிர்ந்தேன். அவர் கையில், பிரித்த கடிதமொன்று இருந்தது. "என்ன!" என்று பரபரப்புடன் கேட்டுக் கொண்டே, கையில் கரண்டியுடன் காட்சி அளித்தாள் பெரியம்மா. "மாப்பிள்ளை கடிதம் எழுதியிருக்கிறார்; இரண்டு மாத லீவில் இங்கு வருகிறாராம். பவானி, சுந்தரேசன் எல்லாரோடும் வரும் திங்கட்கிழமை மாலை வண்டியில் இங்கு வருவதாயும், பெரிய வீடு ஒன்று வாடகைக்குப் பார்த்து வைக்கும்படியும், இவ்வருடம் சுந்த

ரேசன் கலியாணத்தை நடத்திவிட உத்தேசித்திருப்பதாயும் எழுதி யிருக்கிறார்" என்று கூறி முடித்தார் பெரியப்பா.

"பெண் எந்த ஊராம்?" என்று கேட்டாள் பெரியம்மா.

"அட பயித்தியமே! இதுகூடத் தெரியாதா? நம்ப மைதிலிதான்; அவள் தான் அத்தான், அத்தான் என்று அவனோடு உயிரை விட்டாளே, அதையெல்லாம் சுந்தரேசன் பவானியிடம் சொல்லியிருப்பான். இல்லாவிட்டால் இத்தனை வருடங்களாக வராமலிருந்த பவானி, காரணமின்றி வரமாட்டாள். மைதிலி 'அதிர்ஷ்டக்காரி' என்றுதான், நான் சொல்லிக் கொண்டே யிருந்தேனே" என்று கூறி மைதிலியின் முதுகில் தட்டிக் கொடுத்தார். பெரியம்மாவின் முகம் மலர்ந்தது. அன்று இரவெல்லாம், மைதிலியின் 'அதிர்ஷ்டத்தை'ப் பற்றியே தம்பதிகள் பேசி மகிழ்ந்தார்கள். தன் பெண், பவானி வரும் சந்தோஷச் செய்தியை கேட்ட பாட்டி, ஆனந்தக் கண்ணீர்விட்டாள்.

மறு தினமே அடுத்த தெருவில் ஒரு மாடி வீடு வாடகைக்கு அமர்த்தப்பட்டது.

திங்கட்கிழமை காலை முதலே வீடு அமர்க்களப்பட்டது. அன்று அதிகாலையிலேயே, மைதிலிக்கு அலங்காரம் செய்து விட்டாள், பெரியம்மா. மாலையில் ஸ்டேஷனுக்குச் சென்ற வண்டியும் திரும்பி வந்தது. பெரியப்பா மட்டும் இறங்கி வந்தார்; எல்லாரும் ஆவலுடன் அவர் முகத்தை நோக்கினோம். "எல்லாரும் வந்துவிட்டார்கள்; சமையல்காரனும் கூடவே வந்திருக்கிறான்; வேலைக்காரர்கள் சாமான்களை இறக்கியவுடன், பவானி இங்கு வருவாள்" என்றார் பெரியப்பா. மைதிலியின், அலங்காரத்தை கண்டு மகிழ்ந்தார். எல்லோரும் அத்தையின் வரவை அதிக ஆவலுடன் எதிர்பார்த்தோம். நான் காமரா உள் ஜன்னலின் வழியாக, வெளிப்புறம் நோக்கினேன்.

"பம், பாம்" என்ற சப்தத்துடன் வந்து நின்றது ஒரு சிறிய கார். அதிலிருந்து அத்தை இறங்கினார். அத்தை அணிந்திருந்த வைர நகைகளின் ஒளி கண்ணைப் பறித்தது. பின்னோடு ஒரு வேலைக்காரியும் கையில் தட்டுடன் இறங்கினாள். அத்தட்டில், பழவகைகளுடன், ஒரு புதுப் புடவையும் மடித்து வைக்கப்பட்டிருந்தது. இருவரும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். நான் அறையின் வாசற்படி யருகில் நின்று கொண்டு, கூடத்தை நோக்கினேன். உள்ளே நுழைந்த அத்தையைப் பாட்டி தழுவிக் கொண்ட காட்சி, பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. மைதிலியைக் கூப்பிட்டு அத்தைக்கு நமஸ்காரம் செய்யச் சொன்னார், பெரியப்பா. மைதிலிக்கு ஆசி கூறிய பின், அத்தை பவானி தன் அண்ணா, மன்னி இருவரையும்நமஸ்கரித்து, க்ஷேமம் விசாரித்தாள்.

"பிறகு! குழந்தை, அவளெங்கே? அவளைப் பற்றித்தான் சுந்தரேசன் ரொம்பச் சொன்னான். சதா அவள் நினைவுதான் அவனுக்கு" என்று கூறிப் பெரியப்பாவின் முகத்தை ஆவலுடன் நோக்கினாள் அத்தை. "எந்தக் குழந்தை!" என்றார் பெரியப்பா பரபரப்புடன்.

"அவள் தான் அண்ணா! நம் தம்பியின் குழந்தை ஹேமா!" என்ற என் அத்தையின் குரல், கணீரென்று அவ்வீடு முற்றும் ஒலித்தது. அதைக் கேட்டு என் உடல் சிலிர்த்தது. வேகமாக வெளியே வந்து அத்தையை நமஸ்கரித்தேன். அத்தை என்னை வாரி யணைத்துக் கண்ணீர்விட்டாள்.

"ஹேமா! என் தம்பியின் செல்வமான நீ ஒருத்தி இருப்பதையே நான் இதுவரை மறந்துவிட்டேன். அவன் ஆத்மா சாந்தியடைய, இன்றே உன்னை என் 'நாட்டுப் பெண்ணாக' ஏற்றுக் கொண்டேன்" என்று அத்தையின் வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகள் தெய்வ வாக்குப் போல் என் காதுகளில் ஒலித்தன.

அத்தை அளித்த புதுச் சிற்றாடையை அணிந்து கொண்டு எல்லோரையும் நமஸ்கரித்தேன். "தீர்க்க சுமங்கலி பவ" என்று தழதழத்த குரலில் ஆசீர்வதித்தார் பெரியப்பா.

சில்லென்ற ஸ்பரிசத்தால், என் சிந்தனை கலைந்தது. என் கண்களைப் பொத்தி யிருந்த கரங்களை, என் கைகளால் விலக்கினேன். குறும்புச் சிரிப்புடன் நின்ற என் அத்தான், "ஹேமா! எந்தக் கோட்டையைப் பிடிக்கப் போகிறாய்? நான் வந்தது கூடத் தெரியாமல், யோசனையி லிருந்தாயே" என்று கூறிச் சிரித்தார்.

அப்பொழுதுதான், நான் வெகு நேரமாக என்னை மறந்து உட்கார்ந்து விட்டதை எண்ணி வெட்கினேன்.

சிற்றிடை மாதர் நடனம் - - - - சிருங்காரக் காட்சிகள்!

காதலும் கஷ்டமும் சிரிப்பும் சோகமும் ததும்பும்
திரைச் சித்திரம்

பிலிம்ரஸிகர் உள்ளத்தைக்
கொள்ளை கொள்ள வெகு
சீக்கிரம் வெளி வருகிறது



நாகய்யா
மாலதீ

☆ ஸ்ரீ ரேணுகா பிலிம்ஸாரின் ☆

# பாக்யலக்ஷ்மி

☆ நவீன சமூக தெலுங்கு பேசும் படம் ☆



N.S.கிருஷ்ணன்
T.A.மதுரம்




விவரங்களுக்கு:

ஸௌத் இந்தியா பிக்சர்ஸ்

காரைக்குடி.



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## பெரிய முயற்சி

**பி**ள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? "அழகிய மணவாள தாஸர்" என்றும் பெயருண்டு. சுமார் எழுநூறு வருஷங்களுக்கு முன்பு தமிழ் நாட்டில் வாழ்ந்தவர். "திருவரங்கக் கலம்பகம்" முதலிய அஷ்டப் பிரபந்தங்களை இயற்றிய வைஷ்ணவப் பெரியார்.

திருவரங்க க்ஷேத்திரத்தில் அறிதுயில் அமர்ந்திருக்கும் ஸ்ரீரங்கநாதரின் தோள்கள் ஒரு சமயம் பூரித்து உயர்ந்தன என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கூறுகிறார். அதன் காரணம் இன்னதென்பதையும் தெரியப் படுத்துகிறார். கேளுங்கள்:

அருமறை துணிந்த பொருள்முடிவை இன்சொல்
அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பி
  அருளியசடகோபர் சொல்பெற்றுயர்ந்தன
அரவணை விரும்பி அறிதுயில் அமர்ந்த
அணிதிரு வரங்கர் மணிநிகழ் முருந்நர்
  அழகியமணவாளர் கொற்றப்புயங்களே!

அதாவது, சடகோபர் என்னும் நம்மாழ்வாரின் அமுதொழுகுகின்ற இனிய தமிழ்ச் சொற்களைக் கேட்ட ஆனந்தத்தினால் ஸ்ரீரங்கநாதரின் புஜங்கள் பூரித்து உயர்ந்தனவாம்!

தமிழ்மொழியின் இனிமையை இப்படியெல்லாம் நமது முன்னோர்கள் போற்றினார்கள்.

"தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்" என்று சைவப் பெரியார் கூறி, தமிழுக்கும் இசைக்கும் உள்ள பொருத்தத்தை ஆணி அடித்துக் கூறினார். அத்தகைய அமுதொழுகுகின்ற இன்பத் தமிழ்மொழியானது சங்கீதத்துக்குப் பொருத்தமற்றது என்று இக் காலத்தில் சிலர் சொல்கிறார்கள். வெறுமனே விவகாரத்துக்காகச் சொல்வதோடு நிற்கவில்லை. இந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு சங்கீத சபைகளில் நிகழ்ச்சித் திட்டங்களை அமைக்கிறார்கள். பிற பாஷைப் பாட்டுக்கள்தான் அதிகம் இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். தமிழைக் கச்சேரி முடிவுக்குத் தள்ளி ஒதுக்குகிறார்கள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டு தாய் மொழியில் அன்புள்ள தமிழ் மக்கள் சும்மா இருக்க முடியாது என்று சொல்லியிருந்தோம். அவர்களுக்கு ஆத்திரம் உண்டாகத்தான் செய்யும். ஆனால், வெறும் ஆத்திரத்தோடு முடித்து விட்டால் என்ன பிரயோஜனம்? யாருக்குப் பிரீதி? ஆத்திரம் காரியமாக உருக்கொள்ள வேண்டும். தமிழோடு இசையை வளர்ப்பதற்குப் பெரு முயற்சி நடக்க வேண்டும்.

ஏற்கெனவே, இத்தகைய முயற்சிகள் சின்ன அளவில் சிற்சில இடங்களில் நடந்து வருகின்றன. காரைக்குடியில் ஒரு இசையரங்கு ஏற்பட்டு ஒரு வருஷ காலமாக நடந்து வருகிறது. ஆத்தங்குடி என்பது செட்டிநாட்டில் ஒரு சின்ன கிராமம். இந்த கிராமத்தில் ஓர் இசையரங்கம் அமைத்துச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். மாதம் ஒரு கச்சேரி நடைபெறுகிறது. இதுவரை, மதுரை மணி அய்யர், மாயவரம் ராஜம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, ஆலத்தூர் சகோதரர்கள் ஆகியவர்கள் ஆத்தங்குடி இசையரங்கத்தில் கச்சேரி செய்திருக்கிறார்கள் என்று அறிகிறேன்.

மேற்கூறிய இசை யரங்கங்களில், பிற பாஷைப் பாட்டுக்களை அடியோடு தள்ளுவதில்லை. தமிழ்ப் பாட்டுக்கள் பெரும்பாலும் இருக்க வேண்டுமென்றுதான் கோருகிறார்கள்.

ஆனால், இம்மாதிரி சின்ன முயற்சிகள் போதுமா? தமிழ்நாடு முழுவதற்கும் பொதுவான ஒரு பெரிய தமிழிசை ஸ்தாபனம் வேண்டாமா? தமிழ்நாட்டில் பல இடங்களிலும் 'தமிழோடு இசை வளர்க்கும்' சங்கீத

சபைகள் வேண்டாமா? தமிழ்ப் பாட்டுக்கள் சொல்லிக் கொடுக்கும் பள்ளிக்கூடங்கள் வேண்டாமா?

கட்டாயம் வேண்டியதுதான். இம்மாதிரியெல்லாம் தமிழிசையை வளர்ப்பதற்கு ஒரு பெரிய முயற்சி நடந்து வருகிறதென்பதைக் கேட்டுத் தமிழன்பர்களும் இசையன்பர்களும் குதூகலம் அடைவார்கள் என்று நம்புகிறேன்.

முக்கியமாக ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களும், ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்களும் இந்தப் பெரு முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். தமிழ்நாடு முழுவதிலுமுள்ள பல பெரிய மனிதர்கள் இந்த முயற்சிக்குப் பெருந் தொகைகள் நன்கொடையளித்திருக்கிறார்கள். இதுவரையில் இரண்டு லட்சம் ரூபாய் இந்த நன்முயற்சிக்கு நன்கொடை சேர்ந்திருப்பதாக அறிகிறேன்.

எப்பேர்ப்பட்ட நிலைமையிலும் ஒரு நன்மைக்கு வித்து இருக்கும் என்று சொல்வதுண்டு. அதுபோல், ஸர் எம். வேங்கடசப்பராவின் ஆத்திரமூட்டும் பேச்சும், மியூஸிக் அகாடமியின் தமிழ் துவேஷமும் இந்தப் பெரிய முயற்சிக்கு ஆதாரமாயிருந்திருக்கின்றன. ஆகவே, ஸர் எம். வேங்கடசப்பராவுக்கும், மியூஸிக் அகாடமிக்கும் தமிழ் மக்கள் வந்தனம் செலுத்த வேண்டியதுதான்.

"இரண்டு லட்சம் ரூபாய் பணம் வசூலாகியிருக்கிறது" என்று கேட்டதும், சில பிரகஸ்பதிகள் கிளம்பி, "ஓஹோ! பணத்தைக் கொண்டு சங்கீதத்தை உற்பத்தி செய்ய முடியுமா?" என்று கூறிப் புன்னகை புரிவார்கள். இப்படிக் கேட்பதற்கு பிரகஸ்பதிகள்தான் வேண்டுமென்பதில்லை. "பணத்தைக் கொண்டு, சங்கீதம் உற்பத்தி செய்ய முடியாது; ஸாஹித்யமும் உற்பத்தி செய்ய முடியாது" என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. ஆனால், பணத்தைக் கொண்டு சங்கீதத்துக்கு ஆதரவு அளிக்கலாம் என்பதும் தெரிந்த விஷயந்தான். கலைகளின் வளர்ச்சிக்குக் கலைஞர்களின் மேதை எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவர்களுக்கு ஆதரவு அளிப்பதும் அவசியமாகும்.





மேலும், ஒரு விஷயத்தில் உண்மையான சிரத்தையும் ஊக்கமும் எவ்வளவு இருக்கிறதென்பதைக் காட்டுவதற்குப் பணம் ஒரு அளவு கோலாயிருக்கிறது. தமிழ்நாட்டுப் பெரிய மனிதர்களில் பலர் பத்தாயிரம் ரூபாய், ஐயாயிரம் ரூபாய் தமிழிசை வளர்ச்சிக்குக் கொடுத்திருக்கிறார்கள் என்றால், இது விஷயத்தில் அவர்கள் எவ்வளவு சிரத்தையும் ஆத்திரமும் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு அதை அறிகுறியாகக் கொள்ள வேண்டும்.

எனவே, செட்டிநாட்டு ராஜாவும் ஸர் ஆர். கே. ஷண்முகமும் தொடங்கியிருக்கும் இந்தப் பெருமுயற்சி பெரிதும் பாராட்டுதற்குரியதாகும். அவர்களுடைய முயற்சி நெடுகிலும் நல்ல முறையில் நடந்து பரிபூரண வெற்றியடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். தமிழ்நாடெங்கும் தமிழிசை முழங்கும் காலத்தை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

## பம்பாய் — கராச்சி

தமிழர்கள் எங்கே போனாலும் கர்நாடக சங்கீதத்தையும் உடன்கொண்டு போகிறார்கள். பம்பாய் முதலிய நகரங்களில் தமிழர்கள் குடியேறியிருக்கும் பகுதிகளுக்குப் போனால்,

மயிலாப்பூர் அல்லது திருவல்லிக்கேணியைப் போலவே, வீடுகளுக்குள்ளிருந்து சங்கீத பாடங்கள் நடக்கும் சப்தம் வந்து கொண்டிருக்கும்.

ஆனால், சங்கீதக் கலையானது தானே அநுபவிப்பதற்கு மட்டும் ஏற்பட்ட கலையல்ல. கற்ற வித்தையை நாலு பேர் கேட்டு ரஸித்தால்தான் கலை வளர்ச்சி யடையும். இதற்குச் சந்தர்ப்பங்கள் ஏற்படுத்திக் கொடுப்பது ரஸிகர்களின் கடமையாகும்.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் தம் வாழ்நாளில் அற்புதமான சாஹித்யங்களைச் செய்து கர்நாடக சங்கீதத்தை வளர்த்ததுடன், நாளது வரையில் சங்கீத வளர்ச்சிக்கு உதவி செய்து வருவது ஒரு பெரிய விசேஷமாகும். எவ்விதமெனில், ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் ஆராதனை வைபவமானது, சங்கீதக் கலை பயின்றவர்களுக்கெல்லாம் தங்களுடைய கலையைப் பிரகாசப்படுத்திக் கொள்ள ஒரு சந்தர்ப்பத்தை அளிக்கிறது.

பம்பாயிலும், கராச்சியிலும் இவ் வருஷத்திய தியாகராஜ உற்சவம் கொண்டாடப்பட்டதைப் பற்றி நமக்கு விரிவான அறிக்கைகள் கிடைத்திருக்கின்றன. பம்பாயில் 21உயிலிருந்து 30உ வரையில் பத்து தினங்கள் உற்சவம் நடந்தது. ஒரு நாளைக்கு நாலைந்து சங்கீதக் கச்சேரிகள் வீதம் நடைபெற்றன. கச்சேரி என்றால் ஏதோ சாதாரணமாயில்லை. கொன்னக்கோல், கஞ்சிரா, டோலக், கடம், மோர்சிங் வரையில் எல்லாவிதமான பக்க வாத்தியங்களுடனும் பிரமாதமாய் நடந்தன. கச்சேரி செய்த ஸ்திரீகளும், புருஷர்களும் சங்கீதத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள் அல்ல; சங்கீதத்தை ஒரு கலையாகக் கருதி ஆர்வத்தினால் பயின்றவர்கள். மேற்படி கச்சேரிகளைப் பற்றிய சுவாரஸ்யமான விவரங்களைப் படிக்கும்போது, நாம் அச்சமயம் பம்பாயிலும் கராச்சியிலும் இல்லையே என்று தோன்றுகிறது.

பம்பாய் - கராச்சியில் நடந்தது போலவே, உதக மண்டலத்தில் நடந்த தியாகராஜ உற்சவத்தைப் பற்றியும் விவரங்கள் கிடைத்திருக்கின்றன.

தரித்திரம் பிடித்த காகித நெருக்கடியினால் மேற்படி விவரங்களையெல்லாம் பத்திரிகையில் வெளியிட முடியாமலிருக்கிறது. எனவே, அந்த விவரங்களைப் படித்ததில் நான் அடைந்த பெரு மகிழ்ச்சியை நேயர்களுடன் பங்கிட்டுக்கொண்டு இப்போதைக்குத் திருப்தி யடைகிறேன்.

## கேட்டுப் பாருங்கள்!

பிப்ரவரி 21உ திருச்சியில் திருவையாறு அண்ணாசாமி பாகவதர் "கஜேந்திர மோக்ஷம்" கதை பண்ணுகிறார். பாகவதரின் இனிய சாரீரமும், உயர்ந்த சங்கீதமும் பிரசித்தி பெற்றவை.

22உ திருச்சியில் காரைக்குடி சாம்பசிவய்யரின் வீணை.

23உ சென்னையில் தஞ்சாவூர் பொன்னையாப் பிள்ளை பாடுகிறார்.

25உ திருச்சியில் சாத்தூர் கிருஷ்ணய்யங்கார் அவர்களின் தனித் தமிழ் இசை.

26உ திருச்சியில் திருப்பாம்புரம் சகோதரர்களின் நாதஸ்வரமும், வி. எஸ். ரத்னசாமிப் பிள்ளையின் பாட்டும்.

27உ சென்னையில் ஸ்ரீ தண்டபாணி தேசிகரின் தனித் தமிழ்க் கச்சேரி.

28உ திருச்சியில் பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி பாடுகிறார். ஆமாம், பாடத்தான் பாடுகிறார். பாப்பா வெங்கட்ராமய்யர் பிடில்—தஞ்சாவூர் ராமதாஸ் மிருதங்கம் சகிதமாக பிரம்மானந்தமாய்ப் பாடுகிறார். இத்தனை நாள் அவருடைய 'கோட்'டைக் கேட்டவர்கள், இந்தத் தடவை பாட்டையும் கேட்டுப் பாருங்கள்.

## தம்பியைத்தான்!



பெரியவர்:—அம்பி, கெட்டுப்போன காலணாவையா இன்னும் தேடிக் கொண்டிருக்கிறாய்?

அம்பி:—இல்லை தாத்தா, என் தம்பி அதைத் தேடி எடுத்து விட்டான்!

பெரியவர்:—இப்பொழுது எதைத் தேடுகிறாய்?

அம்பி:—என் தம்பியைத்தான்!

# மெஜஸ்டிக் கிளப், விருதுநகர்



**7-3-1943 ஞாயிறு**

**மாலை 6 மணிக்கு**

கோகிலகான இசைவாணி

## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

பாட்டுக் கச்சேரி



தயவு செய்து உங்கள் இடங்களை முன்
கூட்டியே ரிஸர்வ் செய்து கொள்ளுங்கள்

காரியதரிசி,
மெஜஸ்டிக் கிளப், விருதுநகர்.

---

**20-2-43 ல் பேரானந்தமான ஆரம்பம்!**

**சென்னை பிரபாத் டாக்கீஸில்**

# கண்ணகி

உங்கள் அபிமானம் பெற்ற நடிகர்கள் அனைவரும் பிரசித்தி
பெற்ற இந்தப் புராணப் படத்தில் நடிக்கிறார்கள்.

**சின்னப்பா, கண்ணாம்பா, ஜீவரத்னம், கிருஷ்ணன், மதுரம்**

ஆகிய பலர் நடிக்கும் படம் இது.

---

சென்னை உரிமைகளுக்கு:—

**தி சந்திரா டாக்கீஸ் லிமிடெட்., சென்னை.**

என்ற விலாசத்திற்கு எழுதவும்.

# அக்கப் போர்

"காசி"

ருஷ்யர்கள் ஸ்டாலின்கிராடைப் பிடித்ததிலிருந்து சர்ச்சில் துரையும் ரூஸ்வெல்ட் துரையும் பேசுவதைப் பார்த்தால் இரண்டாவது முனை கட்டாயம் ஏற்பட்டு விடுமென்று தோன்றுகிறது. ஆனால் அது நிஜமாகவே ஆரம்பிக்கு முன் எதிரி தேச மக்களின் மனத்தில் குழப்பத்தை உண்டாக்க வேண்டும். அதற்கு ஓர் அமெரிக்கர் சொல்லியிருக்கும் பின் வரும் மூன்று யோசனைகளைக் கையாளலாம் :—

(1) ரோம் நகரத்தின் மீது பூனைகளுக்குப் பிரியமான சாராயத்தை விமானங்களிலிருந்து ஊற்ற வேண்டியது. பூனைகள் அதைக் குடித்து விட்டு மயக்கமாய் விழுந்துவிடுமாதலால் அவற்றால் எலிகளைப் பிடிக்க முடியாது. அதன் பயனாய் எலிகள் ஜனங்களுக்குத் தொந்தரவுகொடுத்துப் பிளேக் வியாதியைப் பரப்பும்.

(2) ஹிட்லரின் பழைய பிரசங்கங்களைப் பர்லினிலுள்ளவர்கள் கேட்கும்படி தினம் இருபத்து நாலு மணி நேரமும் லண்டனிலிருந்து ஒலி பரப்ப வேண்டியது. பர்லின் வாசிகள் அதைக் கேட்டுக் கேட்டுப் பயித்தியம் பிடித்துப் போய்விடுவார்கள். மறுமுறை ஹிட்லர் மேடை மீதேறிப் பிரசங்கஞ் செய்தால் அவரைச் சுட்டுக் கொன்று விடுவார்கள்.

(3) டோக்கியோ நகரத்தில் லக்ஷக் கணக்கான மூக்குக் கண்ணாடிகளைப் போட வேண்டியது. ஆனால் அவை கண் பார்வையைக் கெடுப்பவையாயிருக்க வேண்டும். ஜப்பானியர் அந்தக் கண்ணாடிகளை அணிந்து பாதிக் குருடர்களாய்ப் போய்விடுவார்கள் !

* * *

மகாத்மாவுக்கும் வைஸராய்க்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்தைக் கண்டு



ஸர் கௌவாஸி ஜிகாங்கீருக்கு மூர்ச்சையே போய்விட்டதாம்.

அப்படியிருந்தும் அவர் இன்னும் உயிருடனிருப்பதற்குக் காரணம் சட்டசபையில் "கசையடித் தண்டனை நாகரிகமானது" என்று வாதாடியதாலேயே என்று நினைக்கிறேன்.

* * *

" காங்கிரஸ்காரர் யுத்த முயற்சிகள் அதிகமாவதற்காகப் பேசுவதைத் தவிர வேறு என்ன செய்து விட்டார்கள்?" என்று ஸர் உஸ்மான் கேட்கிறார்.



உணவுப் பஞ்சம் ஏற்படும்படி பெருத்துக் கொண்டே போகாமல் சிறைக்குள் போய் உட்கார்ந்திருக்கிறார்களல்லவா?

* * *

" தாம்பத்ய உரிமையை அளிப்பதற்குக் கூட இந்தியப் பாதுகாப்புச் சட்டம் உபயோகப் படுத்தப்பட்டது வாஸ்தவந்தானா?" என்று ஸ்ரீ பண்டித மித்ரா கேட்டபோது இந்திய சட்டசபையில் 'உரத்த சிரிப்பு' ஏற்பட்டதாம்.

இது மாதிரி சந்தர்ப்பங்களில் அழக்கூடாதென்று இந்திய பாதுகாப்புச் சட்டம் தடை செய்கிறதா, என்ன? இல்லாவிட்டால் அவர்கள் ஏன் சிரித்திருக்கவேண்டும்?

* * *

ஸிந்து நதி வெள்ளத்துக்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி ஸிந்து மாகாண சர்க்கார் ஆராய்ச்சி செய்யப் போகிறார்களாம். ஒரு வேளை மழை பெய்து ஜலம் பெருகுவதால் இருக்கலாமோ என்று எனக்கு ஓர் அற்ப சந்தேகம் தோன்றுகிறது.

* * *

வைஸராய் மகாத்மாவுக்கு எழுதியுள்ள கடிதமொன்றில் 'ஹிம்ஸை' என்ற வார்த்தையை உபயோகப் படுத்தியிருக்கிறார்.

இந்தியாவின் விஷயத்தில் வைஸராய் தெரிந்து கொண்டதெல்லாம் இது ஒன்று தான் போலும்.

* * *

சென்னை மாகாணத்திலிருந்து கடலைப் புண்ணாக்கு ஏற்றுமதி செய்வது இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி தடை செய்யப்பட்டிருக்கிறது. இதிலிருந்து கடலைப் புண்ணாக்கு துருப்புகளுக்கு உபயோகமில்லையென்று நிச்சயமாய் அறிந்துகொள்கிறோம்.

* * *

ஓர் ஆஸ்திரேலியர் ஒழிக்கவே முடியாத துணி ஒன்றைக் கண்டு பிடித்திருப்பதாகப் பெருமை பாராட்டிக் கொள்கிறார். இதைப் பற்றி நமது வண்ணானிடம் சொல்லியபோது அவன் சிரிக்க ஆரம்பித்தது இன்னும் ஓயவில்லை.

* * *

திருவாங்கூர் சமஸ்தானத்தில் இனிமேல் அதிகாரிகள் பரஸ்பரம் எழுதிக் கொள்ளும் சர்க்கார் சம்பந்தமான கடிதங்களில் 'தங்களுடைய மிகவும் கீழ்ப் படிந்துள்ள ஊழியன்' என்று குறிப்பிடவேண்டியதில்லையாம். "தங்கள் உண்மையுள்ள, அல்லது தங்கள் நம்பிக்கையுள்ள" என்று போட்டால் போதுமாம்.

இனிமேலாவது திருவாங்கூர் உத்தியோகஸ்தர்கள் ஒருவரையொருவர் நம்புவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

* * *

ஆர். ஏ. எப். விமானங்கள் சென்ற வாரம் ரோமின் மீது துண்டுப் பிரசுரங்களை வீசினவாம். இதை நினைக்கும்போது பழைய விகடம் ஒன்று ஞாபகம் வருகிறது. யுத்த ஆரம்பத்தில் ஆர். ஏ. எப். விமானங்கள் பெர்லின் மீது துண்டுப் பிரசுரங்களை வீசின. அப்பொழுது ஒரே ஒரு விமானி பிரசுரங்களடங்கிய கட்டை அவிழ்க்காமல் அப்படியே போட்டு விட்டதாக யாரோ புகார் செய்தார்கள். உடனே விமானப் படைத் தலைவர் அந்த விமானியைக் கூப்பிட்டு, "கட்டை அவிழ்க்காமல் போட்டாயாமே, இதென்ன அநியாயம்? யார் தலையிலாவது விழுந்து காயமேற்பட்டால் என்ன செய்கிறது?" என்று கோபித்துக் கொண்டாராம்!

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழின் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: வி. எஸ். ஸ்ரீநிவாசன், மாதவரம் ஹைரோடு, பெரம்பூர்.

# வட்ட மேஜை

பம்பாய்
10—2—43

''பார்த்திபன் கனவு'' என்னும் கதையின் போக்கை 1—2—43 இதழில் பார்த்ததும் அது அடுத்த இதழில் அநேகமாக முடிவடைந்து விடும் என்று ஊகித்தேன். இருந்த போதி லும் இன்றைய இதழோடு அது முடிவடைந்திருப்பதைப் பார்த்ததும் என்னையும் அறியாமல் ஒருவிதத் துக்கம் ஏற்பட்டது. 'முடிவு' மிகவும் சந்தோஷகரமாக இருந்தபோதிலும் இவ்வளவு நாட்களும் ஒவ்வொரு இதழையும் மிகவும் ஆவலுடன் எதிர் பார்க்கும்படி செய்து கொண்டிருந்த கதை அதற்குள்ளாக முடிவடைந்து விட்டதே என்றுதான் துக்கம் ஏற் பட்டது.

அடுத்தபடியாக என்ன கதை, எப் பொழுது ஆரம்பிக்கப் போகிறீர்கள் என்று தெரிவித்தால் மிகவும் சந்தோஷ மாக இருக்கும். கே. ஸ்வாமிநாதன்.

[வந்தனம். அடுத்த கதை ஆரம்பிப் பது அமெரிக்காவிலிருந்து காகிதக் கப்பல் எப்போது வரும் என்பதைப் பொறுத்திருக்கிறது. —ஆசிரியர்.]

2

இருவனந்தபுரம்
12—2—43

இதுவரையில் நானும் எவ்வளவோ நாவல்களும் கதைகளும் படித்திருக் கிறேன். என்ன படித்திருந்தாலும் தங்களுடைய பார்த்திபன் கனவைப் படித்த பிறகு அதற்கு ஈடு அதைத் தவிர வேறு இல்லை என்று சொல்லத் தோன்றுகிறது. இரண்டு தரம் படித் தும் மனம் கேட்கவில்லை. மூன்று தரம் படித்தேன். இன்னும் படிக்கத் தூண்டுகிறது. ஏ. ஸ்வாமிநாதன்.

[மூன்று தடவை படித்ததற்காக மூன்று பங்கு சந்தா கேட்கவில்லை!
—ஆசிரியர்.]

3

சென்னை
14—2—43

தாங்கள் எழுதிய ''பார்த்திபன் கனவு'' என்ற சரித்திரத்தோடு கூடிய அளப்பரிய கற்பனைக் கதை படிக்கப் படிக்க தெவிட்டாதது என்றால் அது மிகைபடக் கூறியதாகாது. இந்தக் கதை ஒன்றைத்தான் நாங்கள் எதிர் பார்த்தபடி முடித்திருக்கிறீர்கள். ஆனால் ஒரு விஷயம். 'சிரஸாக்கினை' என்று அத்தியாயத்தின் தலைப்பைப் பார்த்ததும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. உடனே அதைப் படிக் காமல் அடுத்த அத்தியாயத்தின் தலைப் பைப் பார்த்துப் புளகாங்கித மடைந் தேன். இதில் அருமையான நடை யைக் கையாண்டிருக்கிறீர்கள். 'பார்த் திபன் கனவு' புத்தக ரூபமாக வரும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறேன். 'சிலம்பு'

[தாங்கள் எதிர்பார்த்தபடி கதையை முடித்த பெருமை என்னுடையது இல்லை; நரசிம்ம வர்மருடையது.
—ஆசிரியர்.]

4

ஆசிரமம், மயிலாப்பூர்
15—2—43

''பார்த்திபன் கனவு'' முடிந்து விட் டது. ''கல்கி'' ஒவ்வொரு இதழிலும் இத் தொடர் கதையை நான் எவ்வளவு ருசியுடன் படித்து வந்திருக்கிறேன் என்பதைத் தெரிவிக்கவே இக் கடிதம் எழுதுகிறேன். அதைப் படிக்கும் பொழு தெல்லாம் பிரசித்தி பெற்ற ஆங்கில ஆசிரியர் ஸர் வால்ட்டர் ஸ்காட்டின் நாவல்கள் என் நினைவிற்கு வந்தன. அந்தக் கதைகளின் ரீதியி லேயே 'பார்த்திபன் கனவு'ம் அமைந் திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. கதையின் கட்டுக் கோப்பு, பாத்திரங் களின் அமைப்பு, சம்பவங்களின் பொருத்தம் யாவும் அவைகளுக்குச் சற்றும் குறைந்ததாகச் சொல்லமுடி யாது. கதையின் முடிவைப் பற்றி ஆவலுடனிருந்தேன். நான் நினைத்த தற்கு மேலேயே வெற்றிகரமாய் அமைந்துவிட்டது.

கதையில் நரசிம்ம சக்கரவர்த்தியின் குணம் மிகச் சிறந்து விளங்குகிறது. அதை இதற்கு மேலே உயர்வாகவும் அழகாகவும் காட்ட இயலாது. குந்தவி யின் சித்திரமும் வெகு அழகாய் விழுந் திருக்கிறது. பல்லவர்கள் காலத்தில் தமிழ் நாட்டின் சீரும் சிறப்பையும் பற்றிப் படிக்கும்பொழுது அக்காலத் தில் நாம் இருப்பது போலவே உணர்ச்சி உண்டாகிறது.

கே. சாவித்திரி.

[பழந் தமிழ் நாட்டைப் பற்றித் தமிழ் மக்கள் பெருமை கொள்ளச் செய்யவேண்டு மென்பதுதான் இந்தச் சரித்திரக் கதை எழுதியதில் என் னுடைய நோக்கம், கதையின் சுவை எப்படி யிருந்தபோதிலும், மேற்படி நோக்கம் ஓரளவேனும் நிறைவேறி யிருப்பது பற்றித் திருப்தியடைகிறேன்.
—ஆசிரியர்.]

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.